உ
சிவமயம்

# கும்பாபிஷேக நினைவு மலர்
## (திருவாமாத்தூர்)



வெளியிட்டவர்

**திரு. ஆ. பாலசுப்பிரமணிய பக்தர்**

விழுப்புரம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருவாமாத்தூர்
## ஸ்ரீ முத்தாம்பிகை சமேத அபிராமேஸ்வரப் பெருமான்
# அஷ்டபந்தன மகா கும்பாபிஷேக நினைவு மலர்.

தொகுப்பாளர்:

**கும்பாபிஷேகக் குழுவினர்**

அபிராமேஸ்வரர் தேவஸ்தானம்

திருவாமாத்தூர்,



வெளியிடுபவர்:

**திரு. ஆ. பாலசுப்பிரமணிய பக்தர் அவர்கள்**

சன்முகவிலாஸ் ரைஸ்மில்

திரு. வி. க. வீதி,

விழுப்புரம் P.O.



[29-8-1960.

# உள்ளுறை

உ

குருவே துணை

# அணிந்துரை

எல்லாமவல்ல இறைவன் திருவருட்பேறு கைவரப் பெற்ற நமது முன்னோர்கள், சமய நெறியில் உறுதியுடன் நின்று வழி பட்டு, நமக்கெல்லாம் வழிகாட்டியாயும் வாழ்ந்தார்கள், மக்கட் பிறப்பிலமைந்த உயிர்கட்கு இன்றியமையாத முதற் கடமை ஆலயவழிபாடு. ''எத்தலமும் எத்தேவும் ஏகம்'' என்ற உயரிய ஞானநிலை கைவந்த சான்றோர்களும் கைக்கொண்டது, ஆலய வழிபாடு. ''ஆலயம் தொழுவது சாலவும் நன்றென்பது முது மொழி. அன்றும் இன்றும் புண்ணியத்தல யாத்திரை, புனித நீராடல், இறைவழிபாடு, அடியார் தொண்டு இவற்றை மேற் கொண்டுள்ளவர்களை உலகம் போற்றுகின்றது. சமயநெறி நிற்போர்க்கே இறைவன் குருவடிவாய் விளங்கியருள்வானென் பது நூற்றுணிபு.

''மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே''

என்பர் தாயுமானார்.

நம் தமிழகத்தே தோன்றிய சைவ சமயாசாரியர்கள், வைணவ ஆழ்வார்கள், மற்றும் ஆன்றோர்கள் பலர் தோன்றிய தும், அவர்கள் வழிபட்டதும், பாடியருளியதுமே உயர்ந்த தல மாகப் போற்றப் படுகிறது. அவற்றுள், சைவ நாயன்மார்களில் நால்வரும் பாடிய தலம் ஒரு சில. மூவர், இருவர். ஒருவர் பாடியதாயுள்ள தலங்கள் பல. திருஞானசம்பந்தர், திருநாவுக் கரசர், சுந்தரர், என்ற மூவர் பாடிய தலவரிசையிலுள்ளதும், நடுநாட்டுத் தலங்கள் இருபத்திரண்டிற் சிறந்ததும், மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றும் அமையப் பெற்றதுமாயுள்ளது திருவாமாத்தூர் என்ற திருத்தலம்.

சுமார் அறுபத்தெட்டு ஆண்டுகட்கு முன் சென்ற, விக்குருதி யாண்டில் கும்பாபிடேகம் நடந்திருப்பதாய்த் தெரிகிறது. மறு முறை கும்பாபிடேகம் செய்யப் பலபேரன்பர்கள் மிக முயன்றும்

திருவருள் கூட்டுவிக்கவில்லை. அன்று அவர்கள் எண்ணிய எண்ணம் விதையாயிருந்தது. சிவ புண்ணியச் சீலரான, உயர்திரு, உரத்தூர். M. D. இராமசாமி ரெட்டியாரவர்கள் உள்ளத்தில் இறைவன் திருவருள் தூண்டுதலாற், செய்த பொருளுதவியாலும், முயற்சியாலும், அது இன்று முளைத்துப் பயன் தந்தது. அதன் சார்பில் இந்நூல், கும்பாபிஷேக நினைவு மலராக வெளிவருகின்றது மகிழ்ச்சிக் குரியது. ஐயாயிர ரூபாயளவில் அன்று செய்யத்திட்டமிட்ட விழாவானது, இன்று ஐம்பதாயிர ரூபாய் வரை திருப்பணி, மின்சார அமைப்புகளில் மட்டும் செலவிடப் பட்டுள்ளது.

அரசாங்கத்தின் நிதியிலிருந்து, அறநிலையப் பாதுகாப்புக் கழக ஆணையாளர். உயர்திரு. A. உத்தண்டராமபிள்ளை I. A. S. அவர்கள் ரூபாய் எண்ணுயிரம் உதவினுர்கள். அன்பர்களிடமிருந்து பெற்ற நன் கொடைப் பொருள் உதவியும் சேர்ந்து திருப்பணிகள் மிக அழகிய முறையில் நிறைவேறியது. சில திருப்பணி, தம் சொந்தமான தாகவும் அன்பர்கள் செய்தனர். இத் திருப்பணியின் நிதிக்காக, திருப்புகழ் ஜோதி, திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள், விழுப்புரம், கயிலாய நாதர் கோயிலில் மூன்றுநாள் சொற்பொழிவாற்றி அதனுல் வந்த தொகையை நன்கொடையாக உதவினர். அக்கால் அவர் தலைமையில் நடந்த திருப்பணிக் கமிட்டியின் சிறப்புக் கூட்டத்தில் நடைபெறவேண்டிய கும்பாபிஷேக விழாவில் சிவபுண்ணியச் சீலர்கள் இன்னின்ன உபயத்தை ஏற்றுக் கொள்ள வேண்டிய தென்பதைப் பற்றித் தீர்மானிக்கப் பெற்றது.

## விவரம்

1. வேதபாராயணம்-வேதமூர்த்தி, சோமதேவசர்மா அவர்கள், சென்னை.
2. மகாபிஷேகம் - திருவாளர். கணபதிப்பிள்ளை அவர்கள், மிராசுதார், முண்டியம்பாக்கம்.
3. புலவர்களை வரவேற்றலாதியன - திரு. சு. முத்துபஸ்வா ரெட்டியார் அவர்கள், சோழனூர்.

திரு. M. D. இராமசாமி ரெட்டியாரவர்கள், உரத்தூர்.

திரு. A. K. இராமசாமி ரெட்டியாரவர்கள், அதனூர்.

4. தமிழ்மறை ஓதுவார்கள் கவனிப்பு-திரு. ச. ஆறுமுகம் பிள்ளை அவர்கள், வளையாம்பட்டு.

5. நினைவுமலர் வெளியீடு-திரு. ஆ. பாலசுப்பிரமணிய பக்தர் அவர்கள், சண்முகவிலாஸ் ரைஸ்மில் உரிமையாளர், விழுப்புரம்.

6. திருவுலா-திரு. D. கொண்டா ரெட்டியாரவர்கள், ராதாபுரம்.

திரு. S. ராஜாராம் ரெட்டியாரவர்கள், அபிஷேகப் பாக்கம்.

திருவாமாத்தூர் தோன்றி இதுவரை எத்தனையோ பெரிய விழாக்கள் நடைபெற்றிருப்பினும் இந்தக் கும்பாபிடேக விழாவில் நடந்த இத்துணைச் சிறப்புடன் நடந்ததாகச் சொல்ல இயலாது. மயிலம் ஆதீனம், சிவத்திரு-சிவஞானபாலய சுவாமிகள், மதுரை ஆதீனம்-தவத்திரு-சோமசுந்தர ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் எழுந்தருளியிருந்த சிறப்பு மிகமிகப் போற்றற்குரியது. புலவர் பெருமக்களின் சொற்பொழிவு, இன்னிசையரங்கு, தமிழ்வேத பாராயண இசைவிருந்து, கேட்பவர் மனதைப் பரவசப் படுத்தும் தன்மையிலிருந்தன. அன்பர்கள் உடனிருந்து கண்டு கேட்டு விழாக்களிற் சிறப்புற இருந்தது மகிழ்ச்சிக்குரியது. மின்னொளியலங்காரம் கண் விருந்தாகச் சிறந்திருந்தது. தொடக்க முதல் விழா நிறைவுறும் வரை தமது சொந்த அலுவல்களையும் ஒதுக்கி, ஆன்மலாபந்தருவதான சொந்தப் பணியாக ஏற்று, ஆர்வமும் அயராவுழைப்பும் கொண்டு தொண்டாற்றிய அன்பர்களை யென்றும் மறக்க முடியாது. இவர்கட்கு எல்லா நலங்களையும் இனிது தந்தருளுமாறு முத்தாம்பிகையுடன் விளங்கும் அழகிய நாதப் பெருமான் திருவருளை வேண்டுவ தல்லது யாது செய்ய வல்லோம்.

இது போக எஞ்சியுள்ள பணிகளும், தலபுராணப் பதிப்பும் மண்டல பூசையுள் நடைபெறத் திருவருள் கூட்டுமாறு அவனருளை மனமாரப் போற்றுகிறேன்.

நினைவுமலரில், துதிப்பாடல்களைத் தொகுத்து வெளி யிட்ட, திரு. பால சுப்பிரமணிய பக்தரவர்கள் உள்ளபடியே பக்த ரென்பதில் ஐயமில்லை. வணக்கம்! வாழ்க திருவருள்.

திருவாமாத் தூர்ப்பெருமான் கும்பாபி டேகத்
திருநாளின் நினைவாகத் திகழுமிந்த நூலை
வருவாய்மைத் தொண்டர்பெறப் புத்தகமாப் பதித்த
மாண்புடையோன் விழுப்புரத்தில் மன்னியமெய் யன்பார்
திருவாளன் மின்னியக்கஞ் சேர்ந்திடுமில் நடத்தும்
சீராளன் பாலசுப்ர மண்யபக்த ரென்ன
உருவாகும் பேராளன் தாராளன் பலவாம்
உயர்நலமெல் லாமிகப்பெற் றெளிர்கபுவி யிடத்தே.

சார்வரி ஆண்டு
ஆவணித் திங்கள் 14-ம் நாள்
29-8-60.

இங்ஙனம்
தி. செ. முருகதாசஐயா,
கௌமாரமடாலயம்
திருவாமாத்தூர்.

மயிலுமயிலுந் துணை

## ஊரமைப்பும் நிகழ்ச்சியும்

ஆமாத்தூர் என்பது, பசுக்கள் பூசித்துக் கொம்பு பெற்ற காரணத்தால் ஏற்பட்ட தென்பது வரலாறு. பசுக்களுக்குத் தாய் ஊர் என்பது பொருள். பசு-என்னும் சொல், உயிர்த் தொகுதியைக் குறிக்குமாதலால், அவ்வுயிர்கட்குத் தாயா யிருந்து இறைவன் அருளும் தலம் என்பதும் ஒருகருத்து.

விழுப்புரம் புகைவண்டிநிலயத்தின் வடமேற்கில் செஞ்சிக்குச் செல்லும் கற்பாதையிலிருந்து மேற்கே பிரியும் மட்பாதையில் இரண்டுகல் தொலையில் பம்பையாற்றின் வடகரையில் கோயில மைந்திருக்கிறது. சிவன் கோவிலும் அம்மன் கோவிலும் எதிர்க்கெதிராகச் சற்று விலகியுள்ளது எத்தலத்து மில்லாத அமைப்பு. அம்மன் கோயில், திருமால் கோயிலாயிருந்து மாறிய தென்பது செவிவழிச் செய்தி. காலமாதியனயாருமறி யார்.

சுவாமி கோயிலின் முன் கோபுரம் கற்பணியாலான அடிப் படையோடு நிற்கின்றது. சுவாமி சந்நிதி நேர்முகமாயில்லை. தென்புறம் சென்று வடபுறமாக உள்நுழையும் நிலையிலமைந்த மாடக் கோயில், அர்த்த மண்டபத்தில் நில அறையுண்டு. அச்சுத தேவன் என்ற அரசன் உருவம் கற்சிலையாகப் பள்ளி யறையின் முன் சுவரின் மாடத்துள்ளது. அம்மன்னன் காலத் திய திருப்பணியே ஆலயம் என்பர்.

இரட்டைப் புலவர் கலம்பகப்பாட்டொன்றால் பம்பையாறு திரும்பியதும், தம்பியை வஞ்சித்துப் பொருள் சேர்த்த அண் ணன், பொய் மொழிந்தது காரணமாக, திருவட்டப் பாறையின் கடவுளாணையால், தனது ஊர் செல்லும் இடைவழி 4 கல் தூரத் தில், நாகமொன்றால் உயிர் துறந்ததுமான செய்திகள் இத் தலத்தின் சிறந்த வரலாறு.

புலவர் புராணம் பாடிய, வண்ணச் சரபம். தண்டபாணி சுவாமிகள், அழகிய நாதரின் அருளாணையின்படி இத்தலத்துக் குவந்து, எல்லைதாண்டா நியதியுடன் தங்கி, இறைவனருளை வேண்டித் தவம்புரிந்து திருவருட் பேறுபெற்றனர். அவர் இத்

தலத்தைப் பற்றிப் பாடிய பாடல்கள் மூவாயிரத்து ஐந்நூறுவரையுள்ளன. அவர் சமாதியுற்றபின், ஆலயமும் கௌமாரமடமும் அமைந்துள்ளன. அங்கே அவர் பாடல்களமைந்த பனையோலையேட்டுச்சுவடிகள் அந்த மடத்திலிருக்கின்றன.

பசுக்கள் கூடி வழிபட்டபோது அவற்றைப் புரந்த ஆயர்கள் வாழ்ந்த ஊர், இடைப்பாளையம் எனவும், அவற்றின் சாணங்களைக் குவித்த இடம், சாணிமேடு, எனவும், ஆரியர் கூடி வாழ்ந்த இடம், ஆரியூர் எனவும், சந்தை கூடிய இடம், சந்தைப் பேட்டை எனவும், சோழ மன்னன் வந்து தங்கிய இடம், சோழனூர், எனவும் இப்பதியின் சுற்றுப்புறத்தமைந்துள்ளன. ஒரு கோடி முனிவர் தங்கிப் பூசித்த ஊர் ஒரு கோடி, பெரும் பாக்கம். மேற்கருணை, அரியலூர், அகரம், என்ற ஊர் ஐந்தும் இதன் கிளைப்பதிகள்.

## தேவாரப் பதிகங்களிற் கூறும் உண்மைகள்

ஆமாத்தூர் அம்மான் பொன்னங்கழலைப் பரவாத வாழ்வு மெய்வாழ்வன்று. பொய் வாழ்வே. அவனை எம் பெம்மான் என்று ஏத்தாதார் சிவநேயரும் அல்லர். ஆன்ம நேயரும் அல்லர், மற்று ஆர் என்னில் பேயர். பேயருள்ளும் பேயர் ஆவர் என்று ஞானப்பாலுண்ட தூயவாயர் துணிந்து சொல்லி விட்டார். அவன் திருநீற்றைப் பூசும் அகல்மார்புடைய அடியாரிணக்கமே அருளிணக்கம். மற்றெல்லாம் அழியும் பொருளுக்காக இணங்கப்படும் மருளிணக்கமே. அம்முழுமுதலைக் காணுதகண்கள் எல்லாம் காணுத (குருட்டுக்) கண்களே. குருடரா யிருந்தும் திருப்பதிகம் பாடிய தொண்டு பூண்டு தெளிந்த விழிராய் வாழ்ந்த உண்மையை உணர்ந்து இவ்வாறு பாடினர் போலும் காழி வேந்தர்.

அம் மூர்த்தியின் சீர்த்தியை ஆர்த்திமிகக் கூருத நாவெல்லாம் கூருத (ஊமை) நாக்களே. அவற்றைக் கேளாத செவியெல்லாம் கேளாச் (செவிட்டுச்) செவிகளே யாகும். அவனை வாழ்த்தாத வாழ்க்கை ஒரு வாழ்க்கையாக மதிக்கத் தக்கதே அன்று. அவனை எண்ணுத நெஞ்சம் வஞ்ச நெஞ்சமே யாகும். அச்சிவவேடநெறியில் நில்லா வேடம் பொய் வேடமே. உண்மை

யன்று. அவனைத் தலைவணங்குவோரெல்லாரும் பாவகாரிகள் அல்லர். தேவர்க்குந் தேவராவர். அவனைச் 'சிந்தியாதவர் தீவினையாளரே'. ஆயினும் ஆமாத்தூர் அரனே என்று அழைத்தாலும் அவன் அவர்க்கெல்லாம் தேமாத் தீங்கனி போலத் தித்திக்கும் இயல்புடையான். வஞ்ச ஆறுகள் வற்றிப் போம். அவர்க்கு உலகில் 'ஒன்றுலுங் குறைவில்லை' அவனே சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குப் பொன்னைத் தந்த புண்ணியன். வணங்கி வேண்டும் எவர்க்கும் அதையும் பிறவற்றையும் தருவதில் ஐயமேயில்லை.

## கல்வெட்டுமூலம் காணும் செய்திகள்

கல்வெட்டு : இத் திருக்கோவிலில் கோப்பரகேசரி வர்மன் (முதல் பராந்தகன்) முதலாம் இராசராசன், முதலாம் இராசேந்திரசோழன் (கங்கைகொண்டசோழன்), வீரராசேந்திரன், முதற் குலோத்துங்கன்.

"பூமேவு வளர் திருப் பொன் மார்பு புணர
நாமேவு கலைமகள் நலம் பெரிது சிறப்ப"

என்னும் தொடக்கமுள்ள மெய்க்கீர்த்தியை உடைய இராசகேசரி, திரிபுவன சக்கிரவர்த்தி, குலோத்துங்க சோழதேவன், முதலானோர் காலங்களின் கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இக் கல்வெட்டுக்களில் இறைவர், திருவாமாத்தூர் உடைய பெருமானடிகள், திருவாமாத்தூர் ஆள்வார், திருவாமாத்தூர் ஆளுடையார் அழகியதேவர், திருவாமாத்தூருடைய பரமசுவாமி என்னும் பெயர்களால் குறிக்கப்படுகின்றனர்.

திருக்கோயில், கோப்பரிகேசரி வர்மனது ஆட்சி யாண்டில் கற்றளியாகக் கட்டப்பட்டது. இத்தளியைச் செய்தவன் அருகூர்தச்சன் நாராயணன் வேற்கந்தனாகிய திருவாமாத்தூர் ஆசாரியன் ஆவன், திருச்சுற்று மண்டபத்தைக் கட்டியவன் செம்பியன் காந்திமானடிகள் ஆவன். கோப்பரகேசரி வர்மன் கல்வெட்டில் இவ்வூர் அருவாள் நாட்டு மீய்வழி வாவலூர் நாட்டுத் தேவதானம் திருவாமாத்தூர் எனவும். கோப்பரிகேசரி வர்மன் இராசேந்திரசோழ தேவன் அல்லது கங்கைகொண்ட

சோழன் கல்வெட்டில், ஜயங்கொண்ட சோழமண்டலத்துப் பனை யூர்நாட்டு, வாவலூர் நாட்டுத் தேவதானம் திருவாமாத்தூர் எனவும், முதற் குலோத்துங்கசோழன் காலத்தில் கங்கை கொண்ட சோழவளநாட்டுப் பனைவூர் நாட்டுத் தேவதானம் திருவாமாத்தூர் எனவும், "பூமேவுவளர் திருப்பொன்மார்பு புணர" என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியை யுடைய இராச கேசரி, திரிபுவனசக்கிரவர்த்தி குலோத்துங்க சோழதேவர் காலத்தில் இராசராஜ வளநாட்டுப் பனையூர்நாட்டு வாவலூர் நாட்டுத் தேவதானம் திருவாமாத்தூர் எனவும், வழங்கப்பட் டிருந்தது இக்கல்வெட்டுக்களினல் திருநுந்த விளக்கு எரிப்ப தற்குத் துலைநிறை செம்பொன், ஆடுகள் இவைகளையும் திருச் சந்திக்குத் திருச்சந்தனம், சீதாரி இவைகளுக்குப் பொன்னும், திருப்பதிகம் பாடுவதற்கு நில நிவந்தமும் அளிக்கப்பெற்ற செய்திகள் புலப்படுகின்றன.

இத் திருக்கோயிலில், மூன்று சந்திகளிலும், திருப்பதிகம் பாடிவருவதற்குக் குருடர்கள் பதினறுபேர்களும், அவர்களுக்குக் கண்காட்டுவார் இருவரும், ஆகப்பதினெண்மர்கள் நியமிக்கப் பட்டிருந்தனர். அவர்களுக்கு தலைக்கு நெல் பதக்காக நாளொன் றுக்கு முக்கலமாக, நாள் 360-க்கு நெல் ஆயிரத்து எண்பதின் கலமும், புடவை முதலுக்குப் பேரால்காசு ஒன்ருக காசு பதி னெட்டுக்குக் காசு ஒன்றுக்கு நெல் இருபதின் கலமாகவும் வந்த நெல் 1440 கலத்துக்கு, வேலி ஒன்றுக்கு நெல் நூற்றுஇருபது கலமாக ஆமாத்தூர் இறைவர் தேவதானம் கடுவனூரில் பன்னி ரண்டு வேலி நிலம் காணியாகக் கொடுக்கப்பட்டு வந்தது. இந் நிலையில், 'பூமேவு வளர் திருப்பொன் மார்வு புணர' என்னும் தொடக்க முள்ள மெய்க்கீர்த்தியை உடைய இராசகேசரி திரி புவன சக்கிரவர்த்தி குலோத்துங்கசோழன், தன் ஆட்சியின் இரண்டாம் ஆண்டில் தன் தேவாரத்துத் திருப்பதியம் பாடிய பொய்யாதசேவடி தேவகணநாதனை இராசராசப் பிச்சனையும் அவன் வர்க்கத்தாரையும் இத்திருக்கோயிலில் திருப்பதியம் பாடு வித்துக்கொண்டு, முன்பில் ஆண்டுகள் குருடர்களுக்கு விட்டு வரும் நிவந்தப்படி இவர்களுக்கும் கொடுக்குமாறு கட்டளை யிட்டுள்ளான்.

தென் இந்தியக் கல்வெட்டுத்தொகுதி எட்டு எண் 749
A. R. No. of 433 of 1903.

இக்கல்வெட்டு, குருடர்களைக் கவலையின்றிக் கடவுள் பக்தியில் செலுத்துவதற்கு ஒருவழி காட்டியாகும்.

See the Annual reports on South Indian Epigraphy fon the year 1903 Numbers 402—435.

1922 „ 1—71

South Indian Inscriptions Volume VIII Numbers 718—751.

(South Arcot District, Villupuram Taluk)

பங்குனி மாதந்தோறும், பிரமோற்சவம் நிகழும். ஒவ்வொரு நாளும் காலை விழாவாவும், இரவு வாகன உற்சவமும், கட்டளைக்காரர்களால் நடைபெறுகின்றன. 9-ம் நாள் தேரோட்டம் நிகழும். இதுபோல், கந்தசட்டி விழாவில் சூரசம்மாரம் இவ்வூரில் நன்கு நடைபெறும். மற்றும் மாத விழாக்கள் பலவுண்டு. அரசாங்கத்தாரால் தரப்பெறும் பொருள் ஓராயிரமே. காலசந்தி ஆதிய நான்குகாலப் பூசை தினமும் அதனதன் கட்டளை வருமான மூலம் ஓரளவு நடை பெறுகிறது.

நெடுந்தூரத்திருந்தும், அண்மையிலிருந்தும் வந்து, அபிராமேஸ்வரர் ஆலயத்தில் திருமணம் செய்பவர்கள், எல்லா நலங்களையும் பெறுகிறுர்கள் என்பது வழக்கமாயிருக்கிறது. இரண்டுசத்திரங்கள்பெரிதான தாகமுன்பு, தருமகர்த்தராயிருந்த ஆரியூர் வரதராச பிள்ளையவர்கள் காலத்தில் கட்டப்பெற்றதாக இருக்கிறது.

தேவகோட்டை, தமிழ்வள்ளல், உயர்திரு. உ. ராம. மெ. சுப. சேவு. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் தலைமையில் தொடங்கிய வார வழிபாடு, பிரதி ஞாயிறுதோறும், நடைபெறுகிறது. அதற்கென அவர் வழங்கிய நன்கொடை ரூபாய் 100. அதன் வட்டி மூலம். ஆண்டுவிழாவில் மாணவர்கட்குப் பரிசு தரப் பெறுகிறது.

இத்தகைய திருவாமாத்தூருக்கு, அன்பர்கள் வந்து செல்லு தற்கேற்றவாறு, ரோட்டு வசதி யில்லாதது ஒரு பெருங்குறை. இரண்டாண்டுகளாக, அரசாங்கத் திட்டப்படி பஞ்சாயத்து போர்டும், மின்சார வசதியும் கிடைத்திருக்கிறது. ஆலயத்தைப் பொறுத்தவரை திருப்பணிகள் ஓரளவு மிகச் சிறப்புடன் அமைந்தது. மற்றைய வசதிகளும் இனிமேல் ஏற்படவேண்டும்.

அன்று அரசர்கள் ஆட்சிபுரிய இடமாயிருந்த இத்தலம், இன்று சாதாரண நிலையில் கிராமமாயிருக்கிறது. இவ்வூரை, மக்கள் கோட்டை யென்று இன்றும் கூறுவர். கோட்டை போன்ற பழங் காலச் சின்னங்கள் இருந்து நாளடைவில் மாறி வருகின்றது. அன்று மக்கள் வாழ்ந்த ஊர், ஆற்றுக்குத் தென்புறமென்று சொல்கிறார்கள். காலச் சக்கரத்தின் சுழற்சியால், ஒன்று மற் றொன்றாக மாறுவது உலகியற்கை. கும்பாபிஷேகம் நடைபெற்ற சிறப்பினால் மக்கள் வாழ்க்கையும், பிறநலமும் சிறப்புடனமைய இறைவன் திருவருளைப் போற்றுவோமாக.

## வாழ்த்து

வான்முகில் வழாது பெய்க, மலிவளம் சுரக்க, மன்னன்
கோன்முறை அரசு செய்க, குறைவிலா துயிர்கள் வாழ்க,
நான்மறை அறங்கள் ஓங்க, நற்றவம் வேள்வி மல்க,
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக, உலகம் எல்லாம்.

தெய்வமேதுணை

* தேவாரப் பதிகங்களிற் கூறும் உண்மைகள் கல்வெட்டிற் காணும் செய்திகள். என்ற இரு பகுதிகளும், தருமபுர ஆதீ னத்திருந்து 11—4—60 ல் திருவாமாத்தூர்த் தலத்தில் நடத் திய வழிபாட்டு நாளில் வெளியிடப்பட்ட புத்தகத்திருந்து எடுத் தெழுதப்பட்டது.

# பதிப்புரை

சமயத் தொண்டு புரிதலே தமது பிறவிப்பயன் எனக் கொண்டு, வாழ் நாள் முழுமையும் அதற்கெனவே செலவிட்டுப் பெறற்கரிய இறையருட் பேற்றை யெய்திய பெரியார் வாழ்ந்த நாடு நம் தமிழ் நாடு. அத்தகைய சைவ சமய நாயன்மார் மூவர் பாடிய சிறப்புடன் விளங்குவதும், பசுக்கள் பூசித்துக் கொம்பு பெற்றதுமான தலம் திருவாமாத்தூர் என்பதாம்.

அங்கு திருக்கோயில் கொண்ட பெருமான் முத்தாம்பிகை யுடன் விளங்கும் அழகிய நாதர். அபிராமேஸ்வரர் என்றும் வழங்குவர். பல்லவர் கோமகனுன அச்சுத தேவன் என்பான் கோவிற்றிருப்பணி செய்ததாகக் கல் வெட்டுகள் கூறுகின்றன. பெருஞ் சிறப்புடன் விளங்கும் இக்கோயிலில் கும்பாபிடேகம் நடந்து பல்லாண்டுகள் சென்ற பின், இன்று அவ் விழா நடைபெறுகிறது. அதன் நினைவு மலராக இந் நூல் வெளிவருகிறது.

இப்புனித நாளில் வெளியிடப்படும் இதனுள், சமயாசாரியார் தேவாரப் பதிகங்கள், அருணகிரிநாதர் திருப்புகழ், இரட்டையர்கலம்பகப் பாடல்கள் சில, தலபுராணப் பாடல்கள் சில, தண்டபாணியடிகள், செந்திநயக சுவாமிகள், சுந்தரத்தம்மையார், அசலாம்பிகையம்மாள், முருகதரச ஐயா, கிருபானந்த வாரியார், சிரவை, சுந்தர சுவாமி, இவர்கள் பாடிய சில கவிகள் இதில் இடம் பெற்றுள்ளன.

அன்புள்ளத்தோடு அடியவர் தொண்டு புரிதலே தாம் பெற்றபேறு எனக் கருதுபவரும், திருப்பணிக் குழுவின் உறுப்பினரும், விழுப்புரம், சண்முக விலாஸ் ரைஸ் மில் உரிமையாளருமான, திரு. அ. பாலசுப்பிரமணிய பக்தரவர்கள், இந் நூலைப் பதித்துக் கும்பாபிஷேகத்தன்று அன்பர்கள் கரங்களில் மலரும் படி வழக்கினர்.

செந்தமிழ்ச் சுவையும், பத்தித்திறமும் நிறைந்த பல பாடல்களையும் அன்பர்கள் படித்துப் பயனடையுமாறு புத்தகமாக்கிவழங்கிய, பக்தரவர்கட்கும், பல மலர்களிலிருந்து தேனை யெடுத்து ஒன்று திரட்டி வழங்கும் தேனீயைப்போல, பல நூற்பாக்களைத் தொகுத்து உதவிய திருப்பணிக் குழுவினர்கட்கும் தமிழுலகம் நன்றி செலுத்தவும், ஆமாத்தூர் அழகனை வேண்டவும் அனைவருக்கும் கடமையாயுள்ள போது அவர்களில் நானும் ஒருவன் தானே? நலம்,

திருவாமாத்தூர்
கௌமாரமடாலயம்
29-8-60.

இன்னணம்
**தி. மு. சங்கரலிங்கம்,**
தமிழாசிரியர்.

# திருப்பணி, கும்பாபிடேகக் குழுவினர் விவரம்

## திருப்பணிப் பொறுப்பாளர் :

தமிழ்வள்ளல்-சைவசித்தாந்தப் புரவலர்
உயர்திருவாளர்

உ. ராம. மெ. சுப. சேவு. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்கள்.
தேவகோட்டை.

## தலைவர் :

திரு. ச. ஆறுமுகம் பிள்ளை, மிராசுதார்,
வளையாம்பட்டு.

## துணைத்தலைவர்கள் :

திரு. M. D. இராமசாமி ரெட்டியார், மிராசுதார்,
உரத்தூர்

திரு. தி. கு. இராமசாமி முதலியார், மிராசுதார்,
திருவாமாத்தூர்.

## செயலாளர் ; கருவூலர் :

திரு. சு. முத்துபஸ்வா ரெட்டியார், மிராசுதார்,
சோழனூர்.

## உறுப்பினர்கள் :

திரு. திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்
,, தி. செ. முருகதாச ஐயா அவர்கள்,
கௌமாரமடாலயம், திருவாமாத்தூர்.
,, O. முத்துநாரா ரெட்டியார், மிராசுதார், பகண்டை.
,, P. S. வெங்கடேச ஐயர், வழக்கறிஞர், விழுப்புரம்.
,, K. கோவிந்தசாமிப் பிள்ளை, ,, ,,
,, அ. தி. வரதப்ப செட்டியார், மிராசுதார், ,,
,, A. பாலசுப்பிரமணிய பக்தர், ,, ,,
,, K. L. இராமச்சந்திர ரெட்டியார், ,, காராமணிக்குப்பம்.
,, A. K. இராமசாமி ரெட்டியார், மிராசுதார், அதனூர்.
,, A. N. இளையபெருமாள் பிள்ளை, ,, வெங்கந்தூர்.
,, A. N. ரங்கசாமிப் பிள்ளை, ,, ,,
,, கோ. கணபதிப் பிள்ளை ,, முண்டியம்பாக்கம்.
,, பாலயோகி—ராமதாஸ் சுவாமி, மேலமங்கலம்.
,, அ. ஜானகிராம் ரெட்டியார், இராதாபுரம்.

# தலத்தைப்பற்றிய குறிப்புகள்

1. இடம் :- திருவாமாத்தூர்
2. இறைவன் பெயர் :- அபிராமேஸ்வரர், அழகியநாதர், ஆண்டநாயகர்
3. இறைவி பெயர் :- முத்தாம்பிகை, அழகியநாயகி
4. தீர்த்தம் :-
   1. ஆம்பலம் பூம்பொய்கை (குளம்)
   2. தண்ட தீர்த்தம் (கிணறு)
   3. பம்பை (ஆறு)
5. தல விருட்சம் :- வன்னிமரம்
6. போற்றிப்பாடியவர்; :-
   1. திருஞான சம்பந்த சுவாமிகள்
   2. திருநாவுக்கரசு சுவாமிகள்
   3. சுந்தரமூர்த்தி சுவாமிகள்
   4. இரட்டைப் புலவர்கள்
   5. அருணகிரிநாத சுவாமிகள்
   6. இராமலிங்க சுவாமிகள்
   7. தண்டபாணி சுவாமிகள்
   8. சுந்தரத்தம்மையார்
   9. செந்திநயக அடிகள்
   10. முருகதாச ஐயா
   11. அசலாம்பிகையம்மாள்
   12. கிருபானந்தவாரியார்
   13. சுந்தரசுவாமி
7. நிர்வாகம :- அறநிலையப் பாதுகாப்பு இலாகா
8. தாலுக்கா :- விழுப்புரம்
9. ஜில்லா :- தென்னாற்காடு
10. ரயில்வே நிலையம் :- விழுப்புரம்
11. தளமிருக்கும் இடம் :- வடமேற்குத் திசை மூன்றுமைல் அளவு
12. ஆலய அமைப்பாளர் :- அச்சுத தேவப் பல்லவர்
    ,, கோப்பரகேசரிவர்மன் ஆகியோர்
13. குடமுழுக்கு :- (1) 70 ஆண்டுகட்கு முன்
    ,, (2) 29—8—1960

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருவாமாத்தூர்

# தேவாரப் பதிகங்கள்

## திருஞானசம்பந்தசுவாமிகள் அருளியவை

### இரண்டாம் திருமுறை

பண் - சீகாமரம்.

துன்னம்பெய் கோவணமும் தோலு முடையாடை
பின்னம் சடைமேலோர் பிள்ளை மதிசூடி
அன்னம்சேர் தண்கானல் ஆமாத்தூர் அம்மான்றன்
பொன்னங் கழல்பரவாப் பொக்கமும் பொக்கமே. 1

கைம்மாவின் தோல்போர்த்த காபாலி வானுலகின்
மும்மா மதிலெய்தான் முக்கணான் பேர்பாடி
அம்மா மலர்ச்சோலை ஆமாத்தூர் அம்மான்எம்
பெம்மான்என்(று) ஏத்தாதார் பேயரிற் பேயரே. 2

பாம்பரைச் சாத்தியோர் பண்டரங்கன் விண்டதோர்
தேம்பல் இளமதியம் சூடிய சென்னியான்
ஆம்பலம் பூம்பொய்கை ஆமாத்தூர் அம்மான்றன்
சாம்பல் அகலத்தார் சார்பல்லாற் சார்பிலமே. 3

கோணாகப் பேரல்குற் கோல்வளைக்கை மாதராள்
பூணாகம் பாகமாப் புல்கி அவளோடும்
ஆணாகம் காதல்செய் ஆமாத்தூர் அம்மானைக்
காணாத கண்ணெல்லாம் காணாத கண்களே. 4

பாடல் நெறிநின்றான் பைங்கொன்றைத் தண்டாரே
சூடல் நெறிநின்றான் சூலம்சேர் கையினான்
ஆடல் நெறிநின்றான் ஆமாத்தூர் அம்மான்றன்
வேடம் நெறிநில்லா வேடமும் வேடமே? 5

சாமவரை வில்லாகச் சந்தித்த வெங்கணையாற்
காவல் மதிலெய்தான் கண்ணுடை நெற்றியான்
யாவரும் சென்றேத்தும் ஆமாத்தூர் அம்மானைத்
தேவர் தலைவணங்கும் தேவர்க்கும் தேவனே. 6

மாருத வெங்கூற்றை மாற்றி மலைமகளை
வேருக நில்லாத வேடமே காட்டினன்
ஆருத தீயாடி ஆமாத்தூர் அம்மானைக்
கூருத நாவெல்லாம் கூருத நாக்களே. 7

நாளால் அரக்கன்தோள் சாய்த்த தலைமகன்றன்
நாளா திரையென்றே நம்பன்றன் நாமத்தால்
ஆளானர் சென்றேத்தும் ஆமாத்தூர் அம்மானைக்
கேளாச் செவியெல்லாம் கேளாச் செவிகளே. 8

புள்ளும் கமலமும் கைக்கொண்டார் தாம்இருவர்
உள்ளும் அவன்பெருமை ஒப்பளக்கும் தன்மையதே?
அள்ளல் விளைகழனி ஆமாத்தூர் அம்மான்எம்
வள்ளல் கழல்பரவா வாழ்க்கையும் வாழ்க்கையே. 9

பிச்சை பிறர்பெய்யப் பின்சாரக் கோசாரக்
கொச்சைப் புலால்நாற ஈருரிவை போர்த்(து) உகந்தான்
அச்சம் தம் மாதேவிக்(கு) ஈந்தான்றன் ஆமாத்தூர்
நிச்சல் நினையாதார் நெஞ்சமும் நெஞ்சமே. 10

ஆடல் அர(வு)அசைத்த ஆமாத்தூர் அம்மானைக்
கோடல் இரும்புறவிற் கொச்சை வயத்தலைவன்
நாடல் அரியசீர் ஞானசம் பந்தன்றன்
பாடல் இவைவல்லார்க்(கு) இல்லையாம் பாவமே. 11

———

## இரண்டாம் திருமுறை

### பண் - சீகாமரம்.

குன்ற வார்சிலை நாண்அரா அரி வாளிகூரெரி காற்றின்மும்ம
வென்றவா(று) எங்ஙனே? விடையேறும் வேதியனே ! [தில்
தென்ற லார்மணி மாட மாளிகை சூளி கைக்கெதிர் நீண்ட
அன்றில் வந்தணையும் ஆமாத்தூர் அம்மானே! [பெண்ணைமேல்

பரவி வானவர் தானவர்பல ரும்கலங்கிட வந்தகார்விடம்
வெருவ உண்டுகந்த அருள் என்கொல்? விண்ணவனே!
கரவில் மாமணி பொன்கொழித்திழி சந்துகாரகில் தந்து
அருவி வந்தலைக்கும் ஆமாத்தூர் அம்மானே [பம்பைநீர்

நீண்ட வார்சடை தாழநேரிழை பாடநீறுமெய் பூசிமால் அயன்
மாண்ட வார்சுடலை நடம்ஆடும் மாண்ப(து)என் ?
பூண்ட கேழல் மருப்பராவிரி கொன்றைவாள் வரி ஆமை
ஆண்ட நாயகனே! ஆமாத்தூர் அம்மானே ! [பூண்என

சேலி னேரன கண்ணி வெண்நகை மான்விழித் திரு மாதைப்
ஏலமாதவம்நீ முயல் கின்ற வேடம் இதென்? [பாகம்வைத்(து)
பாலி னேர்மொழி மங்கைமார் நடம் ஆடிஇன்னிசைபாட நீள்பதி
ஆலை சூழ்கழனி ஆமாத்தூர் அம்மானே !

தொண்டர் வந்துவணங்கி மாமலர் தூவிநின்கழல் ஏத்துவார்
உண்டியால் வருந்தல் இரங்காத(து) என்னைகொலாம்? [அவர்
வண்ட லார்கழ னிக்கலந்து மலர்ந்ததாமரை மாதர்வாண்முகம்
அண்ட வாணர்தொழும் ஆமாத்தூர் அம்மானே!

ஓதி ஆரணமாய நுண்பொருள் அன்றுநால்வர் முன்கேட்க
நீதி யாலநிழல் உரைக்கின்ற நீர்மைய(து) என்? (நன்னெறி
சோதியே ! சுடரே ! சுரும்பமர் கொன்றையாய் ! திருநின்றி
ஆதியே! அரனே ! ஆமாத்தூர் அம்மானே ! [யூர்உறை

மங்கை வாணுதல் மான்மனத்திடை வாடியூட மணங்கமழ்சடைக்
கங்கையாள் இருந்த கருத்தாவ(து) என்னேகொலாம்?
பங்கய மது வுண்டு வண்டிசை பாட மாமயி லாட விண்முழ(வு)
அங்கையால் அதிர்க்கும் ஆமாத்தூர் அம்மானே !

நின்றடர்த்திடும்ஐம்புலன்நிலையாதவண்ணம் நினைந்(து)உளத்
வென்ற டர்த்தொருபால் மட மாதை விரும்புதல்என்? [திடை
குன்றெ டுத்தநி சாசரன்திரள் தோளிருபது தான் நெரிதர
அன்ற டர்த்துகந்தாய்! ஆமாத்தூர் அம்மானே!

செய்ய தாமரை மேலிருந்தவ னேடுமாலடி தேடநீள்முடி
வெய்ய ஆரழலாய் விரிகின்ற வெற்றுமைஎன்?
தைய லாளொடு பிச்சைக் கிச்சைதயங்கு தோலரை யார்த்த
வேடங்கொண்(டு)
ஐய மேற்றுகந்தாய் ! ஆமாத்தூர் அம்மானே !

புத்தர் புன்சமண் ஆதர் பொய்மொழி நூல்பிடித்தலர்
தூற்றநின்னடி
பத்தர் பேணநின்ற பரம்ஆய பான்மைய(து) என்?
முத்தை வென்றமுறு வலாள் உமை பங்கன்என்றிமை யோர்
அத்தனே ! அரியாய் ! ஆமாத்தூர் அம்மானே ! [பராவிடும்

வாடல் வெண்டலை மாலையார்த்து மயங்கிருள் எரியேந்தி
ஆடல் மேயதென் என் ருமாத்தூர் அம்மானைக் [மாநடம்
கோடல் நாகம் அரும்பு பைம்பொழிற் கொச்சையாரிறை
ஞானசம்பந்தன்
பாடல் பத்தும் வல்லார் பரலோகம் சேர்வாரே !

---

# திருநாவுக்கரசு சுவாமிகள் அருளியவை

## ஐந்தாம் திருமுறை

### திருக்குறுந்தொகை

மாமாத் தாகிய மாலயன் மால்கொடு
தாமாத்தேடியும் காண்கிலர் தாள்முடி
ஆமாத் தூர்அரனே !அரு ளாய்என்(று)
ஏமாப் பெய்திக் கண்டார் இறை யானையே.! 1

சந்தி யானைச் சமாதிசெய் வார்தங்கள்
புந்தி யானைப் புத்தேளிர் தொழப்படும்
அந்தி யானை ஆமாத்தூர் அழகனைச்
சிந்தி யாதவர் தீவினை யாளரே ! 2

காமாத் தம்எனும் கார்வலைப் பட்டுநான்
போமாத் தையறி யாதுபுலம் பினேன்
ஆமாத் தூர் அர னே!என்(று) அழைத்தலும்
தேமாத் தீங்கனி போலத்தித் திக்குமே! 3

பஞ்ச பூத வலையிற் படுவதற்(கு)
அஞ்சி நானும் ஆமாத்தூர் அழகனை
நெஞ்சி னுல்நினை ந் தேன்நினை(வு) எய்தலும்
வஞ்ச ஆறுகள் வற்றின காண்மினே! 4

குராம னும்குழ லாள்ஒரு கூறனர்
அராம னும்சடை யான்திரு ஆமாத்தூர்
இராம னும்வழி பாடுசெய் ஈசனை
நிராம யன்தனை நாளும் நினைமினே ! 5

பித்த னைப்பெருந் தேவர் தொழப்படும்
அத்த னைஅணி ஆமாத்தூர் மேவிய
முத்தி னைஅடி யேன்உள் முயல்தலும்
பத்தி வெள்ளம் பரந்தது காண்மினே ! 6

நீற்றி னார்திரு மேனியன் நேரிழை
கூற்றி னான்குழற் கோலச் சடையில்ஓர்
ஆற்றி னான்அணி ஆமாத்தூர் மேவிய
ஏற்றி னான்எமை ஆளுடை ஈசனே! 7

பண்ணிற் பாடல்கள் பத்திசெய் வித்தகர்க்(கு)
அண்ணித் தாகும் அமுதினை ஆமாத்தூர்
சண்ணிப் பானைத் தமர்க்(கு) அணித் தாயதோர்
கண்ணிற் பாவையன் னானவன் காண்மினே ! 8

குண்டர் பீலிகைக் கொள்ளும் குணமிலா
மிண்ட ரோ(டு)எனை வேறு படுத்(து)உய்யக்
கொண்ட நாதன் குளிர்புனல் வீரட்டத்(து)
அண்ட னாரிடம் ஆமாத்தூர் காண்மினே ! 9

வானஞ் சாடும் மதிஅர வத்தொடு
தானஞ் சாதுடன் வைத்த சடையிடைத்
தேனஞ் சாடிய தெங்கிள நீரொடும்
ஆனஞ் சாடிய ஆமாத்தூர் ஐயனே ! 10

விடலை யாய்விலங் கல்எடுத் தான்முடி
அடர ஓர்விர லூன்றிய ஆமாத்தூர்
இடம தாக்கொண்ட ஈசனுக்(கு) என்னுளம்
இடம தாகக்கொண்(டு) இன்புற் றிருப்பனே ! 11

——

ஓ

# ஆ ரும் தி ரு மு றை

## திருத்தாண்டகம்

வண்ணங்கள் தாம்பாடி வந்து நின்று
 வலிசெய்து வளைகவர்ந்தார் வகையால் நம்மைக்
கண்ணம்பால் நின்(று)எய்து கழலப் பேசிக்
 கடியதோர் விடையேறிக் காபா லியார்
சுண்ணங்கள் தாம்கொண்டு துதையப் பூசித்
 தோலுடுத்து நூல்பூண்டு தோன்றத் தோன்ற
அண்ணலார் போகின்றார் வந்து காணீர் !
 அழகியரே ! ஆமாத்தூர் ஐய னாரே ! 1

வெந்தார்வெண் பொடிப்பூசி வெள்ளை மாலை
 விரிசடைமேல் தான்சூடி வீணை யேந்திக்
கந்தாரம் தாம்முரலப் போகா நிற்கக்
 கறைசேர் மணிமிடற்றீர் ஊர்ஏ(து) என்றேன்
நொந்தார்போல் வந்தென(து) இல்லே புக்கு
 நுடங்(கு)ஏர் இடைமடவாய் ! நம்மூர் கேட்கில்
அந்தா மரைமலர்மேல் அளிவண்(டு) யாழ்செய்
 ஆமாத்தூர் என்றடிகள் போயி னாரே ! 2

கட்டங்கம் தாம்ஒன்று கையில் ஏந்திக்
 கடிய விடையேறிக் காபா லியார்
இட்டங்கள் தாம்பேசி இல்லே புக்கு
 இடும்பலியும் இடக்கொள்ளார் போவார் அல்லார்
பட்டிமையும் படிறுமே பேசா நின்றார்
 பார்ப்பாரைப் பரிசழிப்பார் போல்கின் றார்தாம்
அட்டிய சில்பலியும் கொள்ளார் விள்ளார்
 அழகியரே ! ஆமாத்தூர் ஐய னாரே ! 3

பசைந்தபல பூதத்தர் பாடல் ஆடல்
படநாகக் கச்சையார் பிச்சைக்கு என்றங்(கு)
இசைந்ததோர் இயல்பினர் எரியின் மேனி
இமையாமுக் கண்ணினர் நால்வே தத்தர்
பிசைந்ததிரு நீற்றினர் பெண்ணோர் பாகம்
பிரிவறியார் பின்னுகனுர் தெண்ணீர்க் கங்கை
அசைந்த திருமுடியார் அங்கைத் தீயர்
அழகியரே ! ஆமாத்தூர் ஐய னூரே ! 4

உருளுடைய தேர்புரவி ஓடும் யானை
ஒன்றாலும் குறைவில்லை, ஊர்தி வெள்ளே(று)
இருளுடைய கண்டத்தர் செந்தீ வண்ணர்
இமையவர்கள் தொழு(து)ஏத்தும் இறைவ னூர்தாம்
பொருளுடையார் அல்லர், இலரும் அல்லர்
புலித்தோல் உடையாகப் பூதம் சூழ
அருளுடைய அம்கோதை மாலை மார்பர்
அழகியரே ! ஆமாத்தூர் ஐய னூரே ! 5

வீறுடைய ஏறேறி நீறு பூசி
வெண்டோடு பெய்திடங்கை வீணை யேந்திக்
கூறுடைய மடவாளோர் பாகம் கொண்டு
குழையாடக் கொடுகொட்டி கொட்டா வந்து
பாறுடைய படுதலையோர் கையில் ஏந்திப்
பலிகொள்வார் அல்லர், படிறே பேசி
ஆறுடைய சடைமுடிஎம் அடிகள் போலும்
அழகியரே ! ஆமாத்தூர் ஐய னூரே ! 6

கையோர் கபாலத்தர் மானின் தோலர்
கருத்துடையர் நிருத்தராய்க் காண்பார் முன்னே
செய்ய திருமேனி வெண்ணீ றுடித்
திகழ்புன் சடைமுடிமேல் திங்கள் சூடி

மெய்யொரு பாகத்(து) உமையை வைத்து
மேவார் திரிபுரங்கள் வேவச் செய்து
ஐயனுர் போகின்ருர் வந்து காணீர் !
அழகியரே ! ஆமாத்தூர் ஐய ஞரே ! 7

ஒன்ருலும் குறைவில்லை ஊர்திவெள் ளே(று)
ஒற்றியூர் உம்மூரே உணரக் கூறீர் !
நின்றுதான் என்செய்வீர் ! போவீ ராகில்
நெற்றிமேற் கண்காட்டி நிறையும் கொண்டீர் !
என்றுந்தான் இவ்வகையே இடர்செய் கின்றீர் !
இருக்குமூர் இனியறிந்தோம் ஏகம் பமோ ?
அன்றித்தான் போகின்றீர் ! அடிகள் எம்மோ(டு)
அழகியரே ! ஆமாத்தூர் ஐய ஞரே ! 8

கல்லலகு தாம்கொண்டு காளத் தியார்
கடிய விடையேறிக் காணக் காண
இல்லமே தாம்புகுதா, இடுமின் பிச்சை
என்ருருக்(கு) எதிரெழுந்தேன்; எங்கும் காணேன்
சொல்லாதே போகின்றீர் ! உம்மூர் ஏது !
துருத்தியோ ! பழனமோ ! நெய்த்தா னமோ !
அல்லலே செய்(து)அடிகள் போகின் றீர்தாம்
அழகியரே ! ஆமாத்தூர் ஐய ஞரே ! 9

மழுங்கலா நீருடு மார்பர் போலும்
மணிமிழலை மேய மணுளர் போலும்
கொழுங்குவளைக் கோதைக்(கு) இறைவர் போலும்
கொடுகொட்டித் தாளம் உடையார் போலும்
செழுங்கயி லாயத்(து)எம் செல்வர் போலும்
தென்அதிகை வீரட்டம் சேர்ந்தார் போலும்
அழுங்கினுர் ஐயுறவு தீர்ப்பார் போலும்
அழகியரே ! ஆமாத்தூர் ஐய ஞரே ! 10

## சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளியது

### ஏழாம் திருமுறை

பண் - கொல்லிக் கௌவாணம்

காண்டனன் காண்டனன் காரிகை யாள்தன் கருத்தனை
ஆண்டனன் ஆண்டனன் ஆமாத் தூர்எம் அடிகட்(கு)ஆட்
பூண்டனன் பூண்டனன் பொய்யன்று சொல்லுவன்
கேண்மின்கள்
மீண்டனன் மீண்டனன் வேதவித் தல்லா தவர்கட்கே

பாடுவன் பாடுவன் பார்ப்பதி தன்அடி பற்றிநான்
தேடுவன் தேடுவன் திண்ணெனப் பற்றிச் செறிதர
ஆடுவன் ஆடுவன் ஆமாத் தூர்எம் அடிகளைக்
கூடுவன் கூடுவன் குற்றம தற்றென் குறிப்பொடே.

காய்ந்தவன் காய்ந்தவன் கண்ணழ லாலன்று காமனைப்
பாய்ந்தவன் பாய்ந்தவன் பாதத்தி னாலன்று கூற்றத்தை
ஆய்ந்தவன் ஆய்ந்தவன் ஆமாத் தூர்எம் அடிகளார்
ஏய்ந்தவன் ஏய்ந்தவன் எம்பி ராட்டியைப் பாகமே.

ஓர்ந்தனன் ஓர்ந்தனன் உள்ளத் துள்ளே நின்ற ஒண்பொருள்
சேர்ந்தனன் சேர்ந்தனன் சென்று திருஒற்றி யூர்புக்குச்
சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலி மென்தோள் தடமுலை
ஆர்ந்தனன் ஆர்ந்தனன் ஆமாத் தூர்ஐயன் அருளதே!

வென்றவன் வென்றவன் வேள்வியில் விண்ணவர் தங்களைச்
சென்றவன் சென்றவன் சில்பலிக் கென்று தெருவிடை
நின்றவன் நின்றவன் நீதி நிறைந்தவர் தங்கள்பால்
அன்றவன் அன்றவன் செய்யருள் ஆமாத்தூர் ஐயனே !

காண்டனன் காண்டனன் காண்டற்கரிய கடவுளாய்
நீண்டவன் நீண்டவன் நாரணன் நான்முகன் நேடவே
ஆண்டவன் ஆண்டவன் ஆமாத் தூரையும் எனையும் ஆட்
பூண்டவன் பூண்டவன் மார்பிற் புரிநூல் புரளவே.

எண்ணவன் எண்ணவன் ஏழுல கத்துயிர் தங்கட்கும்
கண்ணவன் கண்ணவன் காண்டுமென் பாரவர் தங்கட்குப்
பெண்ணவன் பெண்ணவன் மேனியொர் பாகமாம் பிஞ்ஞகன்
அண்ணவன் அண்ணவன் ஆமாத் தூர்எம் அடிகளே !

பொன்னவன் பொன்னவன் பொன்னைத் தந்தென்னைப்
[போகவிடா
மின்னவன் மின்னவன் வேதத்தின் உட்பொ ருளாகிய
அன்னவன் அன்னவன் ஆமாத்தூர் ஐயனை ஆர்வத்தால்
என்னவன் என்னவன் என்மனத்(து) இன்புற் றிருப்பனே !

தேடுவன் தேடுவன் செம்மலர்ப் பாதங்கள் நாடொறும்
நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலேயொர் நால்விரல்
மாடுவன் மாடுவன் வன்கை பிடித்து மகிழ்ந்துள்ளே
ஆடுவன் ஆடுவன் ஆமாத் தூர்எம் அடிகட்கே.

உற்றனன் உற்றவர் தம்மை யொழித்துள்ளத் துள்பொருள்
பற்றினன் பற்றினன் பங்கயச் சேவடிக் கேசெல்ல
அற்றனன் அற்றனன் ஆமாத் தூர்மே யான்அடி யார்கட்காட்
பெற்றனன் பெற்றனன் பெயர்த்தும் பெயர்த்தும் பிறவா
[மைக்கே.

ஐயனை அத்தனை ஆளுடை ஆமாத்தூர் அண்ணலை
மெய்யனை மெய்யர்க்கு மெய்ப்பொரு ளான விமலனை
மையனை மையணி கண்டனை வன்தொண்ட னூரன் சொற்
பொய்யொன்று மின்றிப் புலம்புவார் பொற்கழல் சேர்வரே.

——

# திருவாமாத்தூரைப் போற்றும் திருமுறைகள்

## இரண்டாம் திருமுறை

### க்ஷேத்திரக்கோவை.

மாட்டூர் மடப்பாச்சி லாச்சி ராமம்
முண்டீச் சுரம் வாத வூர் வார ணாசி
காட்டூர் கடம்பூர் படம்பக்கங் கொட்டும்
கடலொற்றி யூர்மற்று றையூ ரவையும்
கோட்டூர் திருவாமாத் தூர்கோ ழம்பமும்
கொடுங் கோவலூர் திருக்குண வாயில். (பா. 7)

ஷை

திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள். பதிகம் 2

## ஐந்து, ஆறும் திருமுறை.

திருநாவுக்கரசு நாயனர். பதிகம் 2

## ஷை ஆறும் திருமுறை.

### காப்புத்திருத்தாண்டகம்.

சிறையார் புனற்கெடில வீரட் டமும்
திருப்பா திரிப்புலியூர் திருவாமாத் தூர்
துறையார் வனமுனிகள் ஏத்த நின்ற
சோற்றுத் துறை, துருத்தி நெய்த் தானமும்
அறையார் புனலொழுகு காவிரி சூழ்
ஐயாற் றமுதன் பழனம் நல்ல
கறையார் பொழில்புடை சூழ்கானப் பேரும்
கழுக்குன்றும் தம்முடைய காப்புக் களே. (பாடல் 1)

### ஷை க்ஷேத்திரக்கோவை.

திண்டீச் சரம்சேய் ஞலூர்செம்பொன் பள்ளி
தேவூர் சிரபுரஞ் சிற்றேமம் சேறை
கொண்டீச் சரம் கூந்தலூர் கூழை யூர்கூடல்
குருகாவூர் வெள்ளடை குமரி கொங்கு
அண்டர் தொழும்அதிகை வீரட் டானம்
ஐயாறு அசோகந்தி ஆமாத் தூரும்
கண்டியூர் வீரட்டம் கருகா வூரும்
கயிலாய நாதனையே காண லாமே.

—திருநாவுக்கரசர் (பாடல் 9)

## ஏழாம் திருமுறை

சுந்தரமூர்த்திசுவாமிகள். பதிகம்

## பதினோராம் திருமுறை.

### சிவபெருமான் திருஅந்தாதி.

அரியாரும் பூம்பொழில்சூழ் ஆமாத்தூர் அம்மான்
அரியாரும் பாகத்(து) அமுதன்-அரியாரும்
வேங்கடத்து மேயானை மேவா உயிரெல்லாம்
வேங்கடத்து நோயால் வியந்து. —கபிலர் (பா. 15)

கருத்துடைய ஆதி கறைமிடற்றெம் ஈசன்
கருத்துடைய கங்காள வேடன்-கருத்துடைய
ஆனேற்றான் நீற்றான் அனலாடி ஆமாத்தூ
ரானேற்றா னேற்றான் எரி. —பரணதேவர் (பா. 21)

## பன்னிரண்டாம் திருமுறை

### பெரிய புராணம்

#### திருநின்ற சருக்கம் - திருநாவுக்கரசர் புராணம்

திருவதிகைப் பதிமருங்கு திருவெண்ணெய் நல்லூரும்
அருளுதிரு ஆமாத்தூர் திருக்கோவ லூர்முதலா
மருவுதிருப் பதிபிறவும் வணங்கிவளத் தமிழ்பாடிப்
பெருகுவிருப் புடன்விடையார் மகிழ்பெண்ணா கடம்
அணைந்தார்—(பா. 148)

#### வம்பறுவரிவண்டுச் சருக்கம்

#### திருஞான சம்பந்தர் புராணம்

பரவி ஏத்திய திருப்பதி கத்திசை பாடினார் பணிந்தங்கு
விரவும் அன்பொடு மகிழ்ந்தினி துறைபவர் விமலரை
வணங்கிப்போய்
அரவ நீர்ச்சடை அங்கணர் தாம்மகிழ்ந் துறைதிரு வாமாத்தூர்
சிரபு ரத்துவந் தருளிய திருமறைச் சிறுவர்சென் றணைவுற்றார்.

சென்றணைந்துசிந் தையின்மகிழ் விருப்பொடு திகழ் திரு
ஆமாத்தூர்ப்
பொன்த யங்குபூங் கொன்றையும் வன்னியும் புனைந்தவர்
அடிபோற்றிக்
குன்ற வார்சிலை எனுந்திருப் பதிகமெய் குலவிய இசை பாடி
நன்றும் இன்புறப் பணிந்துசெல் வார்திருக் கோவலூர் நகர்
சேர்ந்தார் (பா-966, 967)

ஷை சுந்தரமூர்த்தி நாயனர்
(ஏயர்கோன் கலிக்காமர் புராணம்)

மன்னுதிருப் பதிகள்தொறும் வன்னியொடு கூவிளமும்
சென்னிமிசை வைத்துவந்தார் கோயிலின்முன் சென்றிறைஞ்சிப்
பன்னுதமிழ்த் தொடைசாத்திப் பரவியே போந்தணைந்தார்
அன்னமலி வயற்றடங்கள் சூழ்ந்ததிரு வாமாத்தூர்.

அங்கணரை ஆமாத்தூர் அழகர்தமை அடிவணங்கித்
தங்குமிசைத் திருப்பதிகம் பாடிப்போய்த் தாரணிக்கு
மங்கலமாம் பெருந்தொண்டை வளநாடு கடந்தணைந்தார்
செங்கண்வள வன்பிறந்த சீர்நாடு நீர்நாடு.

பா - (292, 293)

திருவருட்பா

... ... ... ... ... — சூர்ப்புடைத்த
தாமாத்தூர் விழத் தடிந்தோன் கணேசனெடும்
ஆமாத்தூர் வாழ்மெய் அருட்பிழம்பே !

—இராமலிங்க அடிகள்.

## அருணகிரிநாத சுவாமிகள் அருளிய

# திருப்புகழ்ப் பாக்கள்.

தனதன தான தானன - தனதானு

அடல்வடி வேல்கள் வாளிகள் -அவைவிட ஓடல் நேர் படும்
அயில்விழி யாலு மாலெலும் - மதவேழத்(து)
அளவிய கோடு போல்வினை-அளவள வான கூர்முலை
அதின்முக மூடும் ஆடையின் - அழகாலும்
துடியிடை யாலும் வாலர்கள்-துயர்வுற மாய மாயொரு
துணிவுடன் ஊடு மாதர்கள் - துணையாகத்
தொழுதவர் பாதம் ஓதியுன்-வழிவழி யானெ னுவுயர்
துலையலை மாறு போ லுயிர் - சுழல்வேனே
அடவியி னூடு வேடர்கள்-அரிவையொ டாசை பேசியும்
அடிதொழு தாடும் ஆண்மையும் - உடையோனே!
அழகிய தோளி ராறுடை-அறுமுக வேளெ னுவுனே
அறிவுட னேது மாதவர் - பெருவாழ்வே!
விடையெறும் ஈசர் நேசமும்-மிகநினை வார்கள் தீவினை
யுகநெடி தோட மேலணை - பவர்மூதூர்
விரைசெறி கோதை மாதர்கள்-விரகுட னுடு மாதையில்
விறல்மயில் மீது மேவிய - பெருமாளே

தந்தனத் தனதானுதன - தனதானு.

கண்கயற் பிணைமானேடுற-வுண்டெனக் கழைதோளானது
நன்கமைக் கினமாமாமென - முகையான
கஞ்சமொத் தெழுகூர்மாமுலை-குஞ்சரத் திருகோடோடுற
விஞ்சுமைப் பொருகார்கோதைகொள் - துயர்காலன்
பெண்டெனக் குளகோலாகல-மின்றெடுத் திளையோராவிகள்
மண்பிடிப் பதுபோல்நீள்வடி - வுடைமாதர்
பின்பொழித் திடுமாமாயையில், அன்புவைத்தழியாதேயுறு
கிஞ்சிலத் தனைதாள்பேணிட - அருள்தாராய் !

விண்டனக் குறவானேனுடல்-கண்படைத் தவன்வேதாவொடு
விண்டுவித் தகன்வீழ்தாளினர் - விடையேறி
வெந்தனத் துமையாள்மேவிய-சந்தனப் புயமாதீசுரர்
வெங்கயத் துரியார்போர்வையர் - மிகுவாழ்வே !
தண்புடைப் பொழில்சூழ்மாதையில்-நண்புவைத் தருள்தாராதல
முங்கிளைத் திடவானின்திசை - யொடுதாவித்
தண்டரக் கர்கள்கோகோவென-விண்டிடத் தடமா மீமிசை
சண்டவிக் ரமவேலேவிய - பெருமாளே!

தனதன தானத் தானன - தனதான.

கருமுகில் போல்மட் டாகிய-அளகிகள் தேனிற் பாகொடு
கனியமு தூறித் தேறிய - மொழிமாதர்
கலவிகள் நேரொப் பாகிகள்-மதனிகள் காமக் ரோதிகள்
கனதன பாரக் காரிகள் - செயலோடே
பொருகயல் வாளைத் தாவிய-விழியினர் சூரைக் காரிகள்
பொருளள வாசைப் பாடிகள் - புவிமீதே
பொதுவிகள் போகப்பாவிகள்-வசமழிவேனுக்கோரருள்
புரிவது தானெப் போதது - புகல்வாயே!
தருவடு தீரச் சூரர்கள்-அவர்கிளை மாளத் தூளெழ
சமநிலை யேறப் பாறெடு - கொடிவீழத்
தனதன தானத் தானன-எனஇசை பாடிப் பேய்பல
தசையுண வேல்விட் டேவிய - தனிவீரா!
அரிதிரு மால்சக் ராயுதன்-அவனிளை யாள்முத் தார்நகை
அழகுடை யாள்மெய்ப் பாலுமை - அருள்பாலா!
அரவொடு பூளைத் தார்மதி அறுகொடு வேணிச் சூடிய
அழகர்தென் மாதைக் கேயுறை - பெருமாளே.

தான தனதன தனதன தனதன - தனதான.

கால முகிலென நினைவுகொ டுநவவி
காதி யமர்பொரு கணையென வடுவகிர்
காணு மிதுவென இளைஞர்கள் விதவிடு - கயலாலும்

காலை மமர்குழ லரிவையர் சிலுகொடு
காசி னளவொடு தலையணு மனதினர்
காம மிவர்சில கபடிகள் படிறுசொல் - கலையாலும்
சால மயல்கொடு புளகித கனதன
பார முறவணை முருகவிழ் மலரணை
சாய தனில்மிகு கலவியி லழிவுறும் - அடியேனைச்
சாதி குலமுறு படியினின் முழுகிய
தாழ்வ தறஇடை தருவன வெளியுயர்
தாள தடைவது தவமிக நினைவது - தருவாயே!
வேலை தனில்விழி துயில்பவ னரவணை
வேயி னிசையது நிரைதனி லருள்பவன்
வீர துரகத நரபதி வனிதையர் - கரமீதே
வேறு வடிவுகொ டுறிவெணெய் தயிரது
வேடை கெடவமு தருளிய பொழுதினில்
வீசு கயிறுட னடிபடு சிறியவன் - அதிகோப
வாலி யுடனெழு மரமற நிசிசரன்
வாகு முடியொரு பதுகர மிருபது
மாள வொருசரம் விடுமொரு கரியவன் - மருகோனே!
வாச முறுமலர் விசிறிய பரிமள
மாதை நகர்தனி லுறையுமொ ரறுமுக
வானில் அடியவர் இடர்கெட அருளிய - பெருமாளே.

# இரட்டைப்புலவர் அருளிய கலம்பகம்

### முக்கண்ணின் இயல்பு

### வெண்பா

எனையளிக்கும் ஆமாதை யீசற்(கு) அனங்கா
உனையழிக்கும் வாள்நயனம் ஒன்று, பனியின்
செருஅழிக்கும் வாள்நயனம் ஒன்று, சேர் மாதர்
உருஅழிக்கும் வாள்நயனம் ஒன்று. 1

### அடியவரிலக்கணம்

### கட்டளைக்கலித்துறை

மீளார் பிறப்பினில், வீழார் நரகினில், வேறொருநூல்
கேளார், உயிர்க்கொரு கேடுசெய் யார்,கிளர் தீவினையில்
மூளார், திருநுதல் நீறிக ழார்,பின்னை முத்தியல்ல(து)
ஆளார், தென் மாதை அழகிய நாத னடியவரே. 2

### இறைவன் தன்மை

### எழுசீர்

அளவிலாதோர் அறிவினாலும் அரியயோகப் பெருமையாலும்
எளியராயும் அரியராயும் யாரும்மெய்யே சேருவாரே
ஒளிகொள்மாதைப் பதியினாரே உருவுதங்கும் அருவுதன்னைத்
தெளிவிலாதார் அன்னமாயும் பன்றியாயும் சேர்கிலாரே. 3

### இறைவன் இன்ப நினைவு

### கட்டளைக்கலித்துறை

வந்திப் பவர்தம் மனக்கோவில் கொண்டவர், மாதையுள்ளார்
கந்தர்ப் பனைவென்ற கண்ணுத லார், கயி லைக்கருகே
இந்தச் சுனைமருங் கேயன் ர் வாழ்வித்த இன்பமெல்லாம்
சிந்திக் கினும்கொண்டல் காள்அண்டர் வாழ்வும் தீப்படுமே. 4

### பம்மை நதி திரும்பிய வரலாறு

ஆற்றுழை யோ, அர வோ, ஆயர் பாடி அருமனையோ
பாற்கட லோ, திங்க ளோ, தங்கும் ஆவம் பலபலவாம்
மார்க்கமும் ஆகிநின் றூர்மாதை நாதர் வலங்கொள்பம்மை
மேற்கரைக் கோயில்கொண் டார்புரம் சீறிய வெங்கணைக்கே. 5

### திருமால், சத்தி சிவம் வேறு வேறல்ல எனல்

வருக்கைத் தடம்பொழில் மாமாதை ஐயர்க்கு, மாசொன்றில்லா
முருக்கொத்த மேனி அழகிய நாதர்க்கு, மூச்சரவத்
திருக்கைக் கமல அரனுர்க்(கு) அரிதிருத் தேவியன்றேல்
அரிக்குப் பொருளுரை யீர்கெடு வீர் நும் அறிவின்மையே 6

### அம்மானை

தந்தை பிடித்தரியத் தாயா னவள்சமைக்க
வெந்த விடக்குண்டு மீண்டனர்காண் அம்மானை
வெந்த விடக்குண்டு மீண்டனரே யாமாகில்
மைந்தன் உறுப்பு மணத்ததோ அம்மானை
மாதையார் வல்லபத்தால் மணத்ததுகாண் அம்மானை 7

### மூவரும் தானேயான நிலை

#### வெண்பா

தேங்கமலம் நாறுவன, தீந்துழாய் நாறுவன
ஓங்கிதழி மாலைதனக் குள்மாலை-பூங்கடுக்கைத்
தெய்வப் பெருமான் திருவாமாத் தூருறையும்
சைவப் பெருமான் சடை 8

### தழை விருப்புரைத்தல்

மேதிக் குலம்சொரி பால்கயல் மாந்தும் விரைப்பழன
மாதைக் கடவுள் சடாடவி யோ, மணிப் பேரணியோ,
ஆதித் தனிவிழி யோ, நகை யோ, செங்கை அம்பின்அம்போ,
போதுற்ற சேவடி யோ, ஐய நீதந்த பூந்தழையே. 9

### திருவடிச்சிறப்பு

#### வெண்பா

பாவ வினைக்குறும்பு பற்றறுக்கும் கொற்றத்தாள்
தேவர் கபாடம் திறக்குந்தாள் - ஆவிவிடாப்
பூமாத்தூ ராற்றுப் பொதிசோறுந் தண்ணீரும்
ஆமாத்தூர் அத்தர் அடி. 10

வண்ணச்சரபம் அருள்மிகு

# தண்டபாணி சுவாமிகள் அருளிய

## தலபுராணத்துட் சில கவிகள்

---

### நாட்டுவளம்

போகரும்அ வாவும்நனி பூசைசெயும் ஆற்றல்
மாகரும்அ வாவுதல் மறந்தபதிச் சூழல்
ஏகரும்அ வாவுடையர் இட்டம்உற வேண்டி
நாகரும்அ வாவுமிசை நண்ணும்நடு நாடு

### நகரச்சிறப்பு

முத்தமிழ்ப் பனுவற் கூட்டில் முதல்ஒலி யலந்தா திக்கே
ஒத்தது, தெய்வங் கட்குள் உமைகண வனையே போன்ற(து)
உத்தம நெறிகள் தம்மில் உயிர்கொலா விரதம் ஏய்த்த(து)
அத்தமா தியமுச் சீரும் அவிர்தரு திருவா மாத்தூர்.

அழகனூர் ஆமாத் தூரின் அணிநெடுந் தெருக்கள் தோறும்
பழமறை ஆக மங்கள், பைந்தமிழ்ப் பனுவல் கற்போர்
குழலிசை யாழ்கற் கின்றோர், கொற்றவில் வாட்போர் கற்போர்
கழகம் ஆ யிரம்எந் நாளும் கவின்றரும் கண்கள் போன்றே.

### தலவிசேடம்

பிறந்தவர்க்கே வீடுதவும் திருவாரூர், கண்டுதொழப் பெற்றோர் கட்கே, சிறந்தமுத்தி தரும்தில்லை, அருணைநினை வார்தனையே சேர்க்கும் வானில் - இறந்தவர்க்கே இனிப்பிறவா நிலையளிக்கும் வடகாசி, இந்த நான்கும் - அறந்தழைக்கும் திருவாமாத் தூர்செயுமால் இதன்பெருமை அறைவார் யாரே.

### தீர்த்தச்சிறப்பு

அந்தண் பம்பையும் கங்கையும் பொருநையு மாகும்
இந்த மூன்றுமே வடதிசை நோக்குப, இவற்றுள்
முந்த ஓதிய தேமுதல் எனுமுறை முனிவோர்க்(கு)
எந்த ஞாயமும் பகர்முதற் புராணம்நன் கியம்பும்

அந்நதியின் கீழ்க்கரையில் ஆம்பலம்பூம் பொய்கையெனச்
செந்நலமார் தமிழ்பாடுந் திருஞான சம்பந்தர்
தந்நவைதீர் பதிகத்திற் சாற்றியதோர் வாவியுள(து)
எந்நகரி லுள்ளாரும் இனிதுகரு திடுமாறே.

## மூர்த்தி மகிமை

ஆதலின் அந்தவூர் நடுக்கொள் ஆலயத்(து)
ஏதமில் இலிங்கமா முளைத்த ஈசனே
மூதறி வினருணர் முதன்மை யாவன்மெய்
ஈதலா முறைசொலின் எமக்கொவ் வாததே.

## திருவட்டப்பாறை யியல்பு.

வேத ஞயுளின் குறைவற விதித்தசீர் மேயவர் தாம்ஓர்பொய்
ஓத லெய்தினும் ஒருவரு டத்தில்அவ் வுரன்அறக் கொலு
மென்னச்
சூத ரோதினர் பலதல புராணமும் சொன்னவர் இதற்கன்றே
நீதம் காட்டுமெய்க் கற்புகழ் விரித்திடர் நீங்குமா றமைத்தாரே.

## பசுக்கள் கொம்பு பெற்றமை

காண்டலும் பலகாற் பணிந்தெழூந் தன்பாற் கண்கள்நீர் கலுழ்ந்திடக்கதறி, ஆண்டநா யகனே அப்பனே பரமானந்தவா ரியிலெழும் அமுதே, நீண்டவன் வருந்த நிமிர்ந்தநீ யெமக்கா நேரெளி வந்தனை யென்று, வேண்டலும் அவற்றின் தலை தொறு முளைத்து மிளிர்ந்தன விறற்றுணை மருப்பே.

## அம்பிகை வழிபட்டது

நந்தியும் பசுக்கள் யாவும் நம்மைநம்பி அன்பிறைற்
சிந்தியா நலம்பொறுத்த மாதையம் பதிக்கண் நின்
புந்தியால் இயன்றவாறு பூசைசெய் திருத்தி!யாம்
வந்திவண் குலாயவாறு வாழ்துமென் றியம்பினன்.

## விநாயகர் பூசித்தது

எத்த லத்தெவர் தாமும்முற் பூசைசெய்
மத்த கக்கரி யானனன் மாதையூர்ச்
சித்த ருக்குச் செயுந்திருப் பூசைமான்(பு)
இத்த கைத்தென்(று) இயம்பரி தாகுமே

அன்னவர்தம் துயரேரர்ந்தங்(கு) அருள்மலிவுற் றனே
வருக்கும்
முன்னவனும் கண நாதன் முகுந்தனது முகம் நோக்கி
என்னருகீன் டுறைமின்!அவன் இகற்போர்வெந் துயர்
கருதும்
இன்னலுரு வண்ணமென்ருள், யாவருமிக் கின்புற்ருர்.

## முருகர் பூசித்தது

அங்குவந்த முருகன்முத லாகமத்தின் விதிபிறருக் கறிவிப்பான்போல், பொங்குகங்கைச் சடைத்தாதை தனேச்சில நாள் மலர்கொடுயர் பூசைசெய்தான். குங்குமக்குன் றெனப்பசுமா மயிலனேயா ளொடுவிடைமேற் குலவக் கண்டாள். எங்குளவா ணவர்முனிவோர் களும்வியப்ப வணங்குபுநின் றிறைஞ்சினுனே.

அளப்பரிய தனிமூலப் பிரகிருதி தன்னேமயி லாக்கித் தன்னேர், உளப்பதுமத் துறைஞான சத்தியைவேற் படையாய்ச் செய் தொருவராலும், கிளப்பரிய நாதசத்தி யினேச்சேவற்கொடி யாக்கிக் கிரீசன், நின்பால் - இளப்பமொன்றும் வாராமல் இவை புழாக்கும் எனக்குகனுக் கீந்தா என்றே.

## பிருங்கிமுனி தவம்

தீங்குதவிர் பம்பையெனும் திருநதியின் வடமேற்கில், ஓங்குபுகழ்த் தனியாமாத் தூருளதவ் வூர்ச்சிவன்றன், பாங்குடையாள் எதிர்க்கோயில்படைத்தருட்கூத் தியற்றுகின்ருள், ஆங்குபெருஞ் சத்தியக்கல் லாமதொன்றும் அமைந்துளதால்

அங்குபோய்த் தவம்செய்தி அவளுளத்தின் அருளார்வம்
பொங்குநாள் வருமளவும், பூருவவா சனேப்பலத்தால்
கங்குல்நேர் களத்தானேக் கலந்திருப்பாள் தனேப்பிரித்துப்
பங்குபே சிடல்!என்ருன் பணிந்தெழுந்து விடைகொண்டு

பகர்வயிற்சென் றனேவோரும் பார்த்திகழும் உருநீத்து
நிகரில்வன்னி மரமாகி நின்றுதவம்செய்கின்ருன்
இகபரத்துள் ளார்பலரும் இந்நாளும் காண்கின்ருர்
சுகபரமா னந்தமுத்தி தோய்தரும்நா ளறியேனே.

## ஷ சுவாமிகள் அருளிய துதிப்பாடல் சில,-

### சிவன். நவரத்தினத் திருப்புகழ். (9ல்-2)

தனனு தாத்தாத் - தன தானு

கணைபோல் வாட்போற் - றிகழ்கூர் நோக்காற்
கடிவார் தாட்கீழ்ப் - பணியாதே
கலிநோ யாற்றிக் - குணர்நேர் போய்ப்போய்க்
கதைநூல் வாய்ப்பாட்(டு) - உரையாதே
இணைசே ராக்கூற் - றுவனுர் வேற்றுக்
கினில்மாய் வாய்ப்போய்ப் - பிறவாதே
இமையா தார்க்காத் - தருள்கூர் மாற்றேட்(டு)
எழிலார் தாட்பூத் - தருவாயே.
துணையா ளுட்போற் - றிலன்வீழ் காற்காற்
றுணைசோர் நாட்காற் - கடிதீவாய்
துடிமான், ஆற்றுக் - கனல்,சேர் நாற்றேட்
சுடராய் ஆர்த்தார்த் - துதைவோனே
திணைதோ றேற்றேற்(று) - அயில்வாய்! போற்றுச்
சிறியோர் பார்க்காப் - பொருளானுய்
தெளிநீர் ஆற்றூற் - கவினுர் நாற்பாற்
றிருவா மாத்தூர்ப் பெருமானே. (1)

தானு தனதன தாந்தன தன்னன - தன தானு

ஆகா நெறியிடை போந்தறம் நண்ணுநர்
சீசீ யெனஉயிர் சோர்ந்தழும் என்மனம்
ஆனு முறைசெய வேண்டிடல் நின்னுளம் - அறியாதோ
ஆடா தியின்நிணம் ஆர்ந்திடு புன்மையர்
மேனுள் சிலவரம் வாங்கின ரென்னவும்
ஆழா ழியின்நடு மாந்தர்கள் சொன்மொழி - நிசமேயோ
பாகாகியருசி தோய்ந்தபல் வண்ணமிந்
நாள்பா டினும்,அடி தேய்ந்துயர் முன்னையர்
பாவால் மகிழ்தகை தோய்ந்திலை இன்னணம் - உறலேனே
பாழாய் உலகழி வாம்படி வன்மைசெய்
தீயோர் அடியொடு மாய்ந்திட என்னெதிர்
பால்நேர் விடைமிசை ஊர்ந்துமை தன்னொடு - வருவாயே.

நாகா பரண!பு ராந்தக! விண்ணவர்
மேல்தீ றியபொடி ஆர்ந்தவிர் வெண்ணிற
நாதா! மலைமகள் காந்த! ஓர் ஐம்முகம் - உடையானே
ஞான கரமறை நான்குணர் நுண்மையர்
ஆனர் தலையணி பூண்டவ! பொன்மகிழ்
நாரா யணர்பலர் தாம்புனை கண்மலர் - கமழ்பாதா!
கூகா வெனஅழு தேங்(கு)உற வின்முறை
யோர்பால் விழுபிணை மாம்பிழை யின்மகர்
கோடா துறுகதி யாஞ்சிவ! சண்மத - முடிவானாய்
கோலா கலமலி வேந்தர்கள் தம்மிறை
யாம்ஓர் தயரதன் மாண்சுதன் நன்மைகொள்
கோமா துருபுரம் வாழ்ந்திட மன்னிய - பெருமானே. 2

முருகன். வாரத்திருப்புகழ். (7ல்-1.)

*தனனதன தாத்தா தனதன—தனதான*

திருவருள்மே லிட்டால் உனைமிக
வழிபடுவார் போற்பார் உலகினர்
சிலர் சொலவாழ் நாட்போ யழிவது - கருதாதே
திறமொழிவேன் வாட்போல் இலகிய
விழிமடமா னர்க்கா கியபணி
செயுமவர்பால் ஏற்றார் தொறும்நிதம்-அலைதீயேன்
அருமறைநூ லோர்க்கா கமம்நுவல்
விதிதவருதார்க் காவியைநிகர்
அநுபவமா ருச்சீர் முழுமையும்-உறுமாறே
அழகினில்மே லாக்கூ றியமயின்
மிசையிருமா னர்க்கூ டயிலுடன்
அநுதினம்நீ தோற்று தயர்வுற - விடலாமோ
குருபர!வா னட்டு டமரர்கள்
புரிதுயர்நோய் தீர்த்தாய் அளவறு
குவடுடையாய்! வேற்பூ சையில்மகிழ் - வுறுவோனே
குகுகுகுகூ கூக்கூ குகுகுகு
எனமுரலோர் போர்ச்சே வலையிகழ்
கொடியவர்சே ராப்பே ரருள்பொழி-விழியானே.

எருதிவர்வார் பாட்டால் அணிபகர்
 சதுரர்கள்சேர் தாட்டா மரையினர்
 இணைதவிர்மா நீற்றுர் தரவரு-புதல்வோனே
எழின்முகிலார் தோப்பூ டுதிர்மலர்
 தரவருதே னுற்ருல் உயர்புகழ்
 இசைதிருவா மாத்தூர் தனில்வளர்—பெருமாளே 3

பதிகச்சதகம் 100-ல் ஒரு பதிகத்தில் 2 கவி
மாதர் மடப்பிடியும் என்ற சம்பந்தர் தேவாரத்தில் உள்ள
யாழ்முரிப்பண்ணின் நடையில் அமைந்தது

சந்தம்

தான தனத் தனு - தன - தான தனத்தனு
தனதன தனதன தான தனத் தனு.

மாதர்ம யக்கம தால் - அதி - பாதகம் உற்றுழல்வேன்
 மன வெளி தனில் அருள் வாரி யுதித்திடு மேல்
ஏதம் உனைத்தொடுமோ - அகல் - பூமி நடுக்குறுமோ
 இசை பெறு முனி வரர் ஏசிந கைப்பர்கொலோ
ஆதவன் அக்கினிமா - மதி - ஆகும் விழிப்பரமா
 அன லிடை வரும் அடல் ஆனை உரித்தணிவாய்
வாதம் இடச்சலியா - தெழு - சார ணருக்கெமனும்
 மகன் நவில் கவி புனை மாதை நகர்ச்சிவனே 4

ஏத மி குத்ததனுல் அகல் பூமி அழற்றெரியா
 இள மதி யினர் களி ஈடு குலைப்பதனுல்
ஓதரு மெய்த்துயர்தோய் தமி யேனை நினைக்கிலையே
 உன துயர் திரு வருள் ஊறு மிகப்பெறுமே
பூத க ணப்படையாய் அயி ராவண விற்பிவர்வாய்
 புய மிசை தனி வட பூதர விற்புனைவாய்
வாத பு ரித்தவனே முதல் நால்வர் தமக்குரியாய்
 மகி மையில் இணை தவிர் மாதை நகர்ச்சிவனே. 5

ஷ தேவாரம் பண்வியாழக் குறிஞ்சி - திருக்கழுமலப்பதிகம்
திருத்தாளச்சதி. பந்தத்தால் என்ற பண்முறை.

## ஷ பதிகம் கவி 2.

தந்தத்தா தந்தத்தா தனந்த தந்த தந்தனந்
தானா தானா தானனத் தனதன தனதனனா.

அந்தத்தே நின்றற்பேர் அறைந்தும்அந்த கன்றன்வம்(பு)
ஆரா தாராய் வீடேபுக் - கவர்களும் உளரெனவே
இந்தப்பா ரின்கட்பே சிடுஞ்சொ லொன்றும் உண்டுணர்ந்(து)
யான்ஓ யாதே கூருர்வத் தினிலொரு பயனிலேயோ
சந்தத்தே ரொன்றிற்போ தருந்தினம்பு ரங்கொளும்
தாரார் நேரார் நீருகத் தகுநகை புரியவலாய்
பந்தத்தால் நொந்திட்டார் பரிந்துவந்து வந்தனம்
பாடா வீருர் ஆமாதைப் பதிவளர் பரசிவனே. 6

எண்டிக்கோ ருஞ்செப்பீ டியன்றதொண்டர் தங்கண்முன்(பு)
[1] *ஏடோர் நீரா றேறேனுற் றிலகினன், [2] விடமுணவா
உண்டிட்டேஅம்பிற்போய்உயுந்தொழும்பன், [3]இன்பம்உண்(டு)
ஓரான், [4] வானே யானன், ஒத் துயுநலம் உறவருள்வாய்
கண்டிச்சீர் கொண்டுற்ருர் கணம்சொ லுஞ்சொல் நன்குறும்
காதா வேதா மால்போரிற் கனல்வரை யெனநிகழ்வாய்
பண்டிக்கே தம்துய்க்காய் பயந்தநங்கை இன்றுறும்
பாரா காரா ஆமாதைப் பதிவளர் பரசிவனே. 7

1. ஏடு ஓர் நீர் ஆறு ஏறு ஏண் உற்று இலகினன்-வைகை நதியில் ஏடு ஏறச்செய்த வலியினர், சம்பந்தர்.

2. விடத்தை உண்டு கல் தெப்பம் ஏறியவர், அப்பர்.

3. இருமனேவியர் இன்பம் நுகர்ந்தும் அறியாதவர், சுந்தரர்.

4. பரவெளியில் ஒன்று பட்டவர், வாதவூரர்.

### யமக அந்தாதி

மறவாத வித்தை முதலாய தீவினே மாறவுன்னே
மறவாத வித்தை விழைவேனே வீணில் மடித்தொழியேல்
மறவாத வித்தை யனேயாய்! அருச்சுனன் மாட்டமர்செய்
மறவா! தவித்தைய ரார்சேரு மாதை வரோதயனே. 8

1. மற-வாது-பிணக்குமுள்ள தர்க்கமும், அவித்தை-அஞ்ஞானமும்.

2. மறவாது அவித்தை விழைவேனே - உம்மைச்சதா நினைக்கும் ஞானம் விரும்புமடியேனே.

3. மல்தவாத வித்தை அனையாய் - வலிமை குன்றாத விதை போன்றவரே.

4. மறவா - வேடவடிவெய்தியவரே! தவித்து. தாபமதி கரித்து - அயரார்சேரும் - சோர்வு அடையாதவர்கள் வந்தடைகின்ற, திருவாமாத்தூர்ப் பெருமானே.

### திரி வந்தாதி

விரைத்த வனக மடவார்தம் ஆசை வெறுத்துன் அன்பிற்
கரைத்த வனக மனதாள ரோடெனைக் காப்பதென்றோ
திரைத்த வனகஞ்செற் றோன்றொழு மாதைச்செஞ் சித்த! பன்னூல்
உரைத்த வனகவிற் கொண்டுமண் தேரன் றுகைத்தவனே. 9

1. விரைதவனக-மணமுள்ள மருக் கொழுந்தணிந்த.

2. அன்பிற்கரைத்த அனகமனதாளரோடு-அன்பின் வயப்பட்ட புண்ணிய மனமுடைய அடியாரோடு.

3. திரைத்தவன் அகம் செற்றோன்-அலைகளையுடைய வருணனது ஆணவத்தையழித்த இராமபிரான்.

4. பன்னூல் உரைத்தவ - உலக நன்மைக்காகப் பல வேதாகமங்களைக் கூறியவரே. நகவில் கொண்டு - மலையாகிய வில்லையேந்தி.

### திருவிழாப் பாடல்கள்

அடியார் புடைசூழ ஆமாத்தூர்க் கோயிற்
கொடியேற்றிக் கொண்ட குழகா-இடிபோல்
தொனிக்கும் இடபமிசை தோன்றினை!யென் நெஞ்சம்
பனிக்குமிடர் தீர்தரக்கண் பார். 10

மதியணி சடைப்பிரானை மாதையூர் வீதிதன்னில்
குதிரைமேற் கண்டோர் தம்மிற் குளிர்தமிழ் வாதவூரான்
கதிபெறு மவர்சில் லோரே; கன்னிநாட் டரசன் போலப்
பதியும்வாழ் வடையக் கொண்டோர் பற்பல பேரானரே. 11

ஆரூர் முழுதறிய ஆயிழைக்கோர் தூதாகி
ஊரூர்கள் தோறும் உழன்றிரந்தோ னொருவன்
காரூர் பொழில்சூழ் கவின்றிருவா மாத்தூரில்
தேரூர்ந்து வீதிவரும் சீர்பெறவும் கண்டோமே. 12

முன்பு நடந்த கும்பாபிடேகத்தன்று கூறியது

பம்பா நதியினிடப் பாலாமாத் தூர்ச்சிவனர்
கும்பாபி டேகமது கொண்டருளித்-தம்பாரி
மக்களொடும் வீதிவலம் வந்ததனல் மாநிலத்தோர்
ஒக்கஇனி வாழ்வார் உவந்து. 13

ஸ்ரீ தண்டபாணிசுவாமிகளது வாழ்க்கைத் துணைவியார்
திருமதி. சுந்தரத்தம்மையவர்கள் இயற்றியவை.
அழகியநாதர் இரட்டையாசிரியமாலை.

செம்பவள மனையவுன் திருவுருவி னழகும்,வெண்
திங்களொளிர் சடையினழகும்
செங்கரும் புச்சிலை வளைத்தமத னைப்பொடித்
திட்டசெங் கண்ணினழகும்
அம்பனைய விழிமங்கை தன்கைக் குழந்தையொடுன்
அருகினி லிருக்கும் அழகும்
ஆத்தியொடு கொன்றையும் பச்சறுகு வில்வமுதல்
அணிகின்ற சடையின் அழகும்
கம்பமத கரியுரித் தணிகின்ற அழகும்,வெங்
கட்செவி புனைந்த அழகும்
கண்டுதொழு துருகாத பாவியே னுக்குனது
கருணையொரு சிறிது புரிவாய்!
கும்பமுனி முதலோர்கள் வந்துபணி செய்திடும்
கோமாதை யூரிலென்றும்
கொஞ்சுபைங் கிளியினது செஞ்சொலும் புனைகின்ற
கோலா கலத்தெய்வமே. 14

அபிராமமாலை.

சந்தப் பாடல் பொழிந்திடும் கிள்ளையாய்ச்
சத்தி வேலவன் தன்கரத் துற்றகோன்
இந்தப் பாரில்வந் தென்றனை யாட்கொளும்
ஈட தால்அருட் பேறு விழைந்துளேன்
முந்தப் பாழ்வினை யாவையும் நீக்கியுன்
முண்ட கப்பதம் என்றெனக் கீவையோ
மந்தப் போதமு ளார்மரு வாத்திரு
மாதை மாநகர் வாழபி ராமனே. 15

முத்தாம்பிகைமாலை.

ஆவலுட னுன்றன் அடிபணியும் நாயேனைப்
பூவலயத் தாசை பொருந்தாது காத்தருள்வாய்
நாவலவர் சூழும் நளிர்திருவா மாத்தூரிற்
காவலவர் போற்றும் கனமிகுமுத் தாம்பிகையே. 16

ஷை பதிகம்.

சிங்கமிசை யேறித் திருவாமாத் தூர்த்தெருவில்
துங்கமுடன் வந்தன்பர் தோத்தரிக்க நின்றன்றருள்வாய்
அங்கயற்கண் ணாளே அழகியமுத் தாம்பிகையே
எங்கள்வினை தீர்த்துன் இணையடிக்கா ளாக்குவையே. 17

## ஷை சுவாமிகள் மகனாரும் மாணவருமான சந்தப்புலமை

### தி. மு. செந்திநாயக சுவாமிகள் இயற்றியது

அழகிய நாதமாலை.

அழகுதிகழ் வெள்விடையின் மிசைநீயும் உமையும் வந்(து)
அடியனேன் முன்பு நின்றுன்
அடியவர்க ளிடையெனையும் ஒருவனென எல்லோரும்
அறைகின்ற செல்வமதனைக்
கழகிநிகர் புலவர்கள் புகழ்ந்திடும் சீராய
கல்வியுட னேகொடுத்துக்
கந்தனென இவ்வுலகில் அருளாடல் பலசெய்து
கவினச்செய் வாய்கொல்? அறியேன்
தழலனைய வடிவமுடை யானே!ம தன்றனைச்
சமனைவதை செய்தெழுப்பும்
தயையுடைய தெய்வமே! கங்கையணி சடையினிற்
றண்மதி யுடன்புனைந்தாய்!
மழுவதனை மானொடேணிந்தபுயம் உடையவா!
மாகநக ரிற்குலாவும்
வானவர்கள் பணிபாத; கூனல்வளை அணிகாத
மாதைஅழ கியநாதனே. 18

திங்களும் கொன்றையும் கங்கையும் தும்பையும்
திகழும் சடைக்கற் றையைத்
திரிபுரம் பொடியாக நகைசெய்த வாயைத்
தினந்தொறும் நினைந்து போற்றும்
அங்கமுடை யோர்குழுவில் அடியேனும் ஒருவனென
அவிரச்செய் தாண்டு கொண்டால்
அகிலமுனை நிந்தித் திகழ்ந்திடா தாகையால்
அவ்வண மியற்றி யருள்வாய்
தங்கமலை யாயசிலை யுடையசிவ சம்புவே
சதுமுகன் தலைகொய்துபின்
தக்கனைச் சங்கரித் துக்காத்த தெய்வமே!
சத்தியொரு பாகத்தில்வாழ்
மங்களா கரமோடி லங்குங் கருத்தனே
மாகநக ரிற்குலாவும்
வானவர்கள் பணிபாத! கூனல்வளை யணிகாத!
மாதையழ கியநாதனே. 19

முத்தாம்பிகை-கீர்த்தனை.

சுருட்டி-ராகம். ஆதி-தாளம்.

பல்லவி

முத்தாம் பிகைக்கருணைத் தாயே-எனை
முழுதும் இரட்சித்தருள் வாயே.

அநுபல்லவி.

பித்தாளர் போலலைந்து பெண்டுபிள்ளைவிழைந்து
வித்தாரம் பேசிநைந்து விணாய்ப்போ காமுன்வந்து. முத்.

சரணம்.

அந்தாதிக் கவிநூறு சாற்றும்—அந்த
அபிராமப் பட்டரெதிர் தோற்றும்.
செந்தாம ரைப்பதங்கள் தெரிசித்திட் டாலேயெங்கள்
சிந்தாகு லிதங்கள் தீரும் களிக்கும்கண்கள். முத்.

முன்னாள் ஒருபுலவன் பின்னே—மகள்
முறையாய்த் தொடர்ந்துசென்ற தென்னே?

இந்நாள் எனதுமிடி இல்லாத கலும்படி
சொன்னலுன் திருவடி தொழுது பிழைக்கநொடி முத்.

பெண்ணுசை பொன்னுசை என்னும்—இரு
பேயால் அலேந்த தன்றிப் பின்னும்.
மண்ணுசை யாலும்உள்ள வருத்தம் அளவோவில்ள
கண்ணுல் ஆண்டுகொள்ளக் கருத்தில் நினேப்பாய்மெள்ள
முத்தாம்பிகைக் கருணேத்தாயே 20

---

# ஸ்ரீ. முத்தாம்பிகை பிள்ளேத்தமிழ்

(நூறு பாடலுடையது)

ஷையார் மகளுரும் - மாணவருமான

## தி. செ. முருகதாச ஐயா அவர்கள் இயற்றியது

### காப்புப்பருவம்

(திருமால்)

செந்தாம ரைத்திரு விளங்குமரு மமும்அமரர்
சிந்தாகு லங்கெ டச்செய்
தினகரனே மதியைநிகர் திகிரிவளே யவிரிரு
திருக்கைக ளுங்கொள் மாலேத்
தந்தாவ ளங்கருதி நொந்தோலி டும்பொழுது
சார்ந்திடர் தவிர்த்த அரியைத்
தவராசர் புவிராசர் கவிராசர் புகழ்பரந்
தாமனேநி னேந்து பணிவாம்
இந்தார் சடாடவிப் பரமனுக் கெதிராம்
எழிற்கோயில் பெற்றுளாளே
இலகுகவு ணியமதலே அமுதபொழு தினியபால்
இன்பொடு சுரந்த ளிக்கும்
பந்தார் தனச்சிவையை நந்தா உயர்ச்சிபெறு
பம்பா நதிக் கரைப்பாற்
பயில்மாதை முத்தாம் பிகைத்தாயை நாபெ. ா றும்
பாங்கொடு புரப்ப தற்கே. 1

## செங்கீரைப்பருவம்

திருநீடு கயிலையர னிடம்நீயொர் நாளினிற்
சிந்தனையில் உன்ற னையெனுச்
சிறுவிதி குமாரியென எனையுலகர் ஓதுமொழி
தீரவருள் புரிதி யென்ன
உருகாத ரத்தொடரன் இமையா சலத்ததிபன்
உன்னைமக வாப்பெ றற்காம்
உயர்தவம் உஞற்றுகின் றுன்அவா றுயமைந்(து)
ஒளிர்திசின் னுள்க ழித்துப்
பெருகார்வம் உறமணப் போம்எனு மொழிப்படியோர்
பெண்மக வெனத் தடத்திற்
பிரசமலர் மேற்றண்மதி யெனநிலா விடுசீர்
பிறங்கல்அரை யன்றெ ரிந்தே
தெருள்நீட மேனைபாற் கொண்டுதவ வளர்அம்மை!
செங்கீரை ஆடி யருளே
தீந்தமிழ்கொள் மாதைமுத் தாம்பிகையெம் அன்னை நீ
செங்கீரை ஆடி யருளே. 22

## தாலப்பருவம்

வெங்கட் குறுந்தாட் பெரும்பூத
வேந்தைப் பசியால் மெலிய வைத்து
வெற்பார் உணவும் மற்றெவையும்
விரும்பியளித்தும் தாகமிகுத்(து)
அங்கம் வருந்தும் போது வைகை
ஆறும் அன்னக் குழியும்அரன்
அளித்துத் தீர்க்கும் திருவிளையாட்(டு)
அன்பர் உணர்ந்து மகிழ்ந்திடமுச்
சங்கமருவி வளர்ந்திடமுத்
தமிழ்த்தென் பாண்டி வளர்மதுரைத்
தலத்திற் பலவா னவர்முனிவர்
தரையாள் அரசர் பரவுசிவ
சங்க ரனைமுன் மணந்து வந்தாய்
தாலோ தாலோ தாலேலோ
தமிழ்சேர் மாதைப் பதிஅழகி!
தாலோ தாலோ தாலேலோ. 23

### சப்பாணிப்பருவம்

அடுத்தார் தமைக்காத் தருள்புரியும்
அருளிற் சிறந்த பரன்கயிலை
அணிமால் வரைப்பூங் காவனத்தன்(று)
அவிர்ஆலால சுந்தரனர்
வடுத்தான் எனுங்கண் இருமடவார்
வாஞ்சை யுறலாற் சிவன்சொலல்போல்
மாணர் இகத்திற் பிறந்துரிய
மணஞ்செய் திடுகால் அவனவிர்ந்து
தடுத்தாண் டருளி, இருமனைமார்
சாரப் புரிந்திட்(டு) அருந்தமிழ்ப்பாச்
சாற்றி வரும்நாள் பொன்விழையும்
தகையால் வன்னிக் காயைஅள்ளிக்
கொடுத்(து) ஆடமாக்(கு) அரன்தேவி
கொட்டி யருளாய் சப்பாணி
கோமா துருப்பேர்ப் பதியழகீ
கொட்டி யருளாய் சப்பாணி. 24

### முத்தப்பருவம்

துன்பார் உலகப் பொருள்விருப்பிற்
சுழற்றைம் புலவே டுவர்செயலால்
தொனியார் இடிகேட் டயர்ந்திடுமா
சுணம்போல் உள்ளம் தளர்ந்திடினும்
இன்பார் செயலே பினும்கருதும்
இகலாம் மனத்தால் அடிச்சிறியேன்
இயற்றும் பிழைநின் திருவுள்ளத்(து)
எண்ணு திரங்கி இந்நாளில்
அன்பார் தவக்கொங் கணர்புசுண்டர்
ஆசில் புகழ்ச்சங் கரமுனிவர்
அணியார் பிரம புரப்பிள்ளை
ஆதி யோர்க்கன் றருள்செயல்போல்
முன்பார் சேவை யளித்துனது
முத்தம் தருக முத்தமே
முத்தாம் பிகையே மாதையில்நின்
முத்தம் தருக முத்தமே. 25

## வருகைப்பருவம்

வாசப் புதுநீர் முழுக்கமைப்பேன்
வாட்கண் இணைக்கு மையிடுவேன்
மஞ்சே யனைய குழல்முடிப்பேன்
மணப்பூச் சூட்டிப் பொட்டணிவேன்
மாசற் றவிர்பொற் கலைபுனைவேன்
மணிப்பூ ணணிகள் சூட்டிடுவேன்
மலிதீஞ் சுவைப்போ னகந்தருவேன்
மடவார்க் கரசே வருக!இருட்
பாசப் பிணிப்பற் றவர்பரவும்
பாவாய் வருக! உளத்தினிக்கும்
பாகே வருக! என மேனே
பரிவோ டழைக்க வளர்தாயே!
நேசத் துடனென் முன்னருட்சீர்
நிலவ வருக வருகவே
நேமச் சிலம்பார் கழல்அழகீ
நிதமுன் வருக வருகவே.

## அம்புலிப்பருவம் (தண்டம்)

தந்தன தானன தந்தன தானன
தந்தானந்தனனே.

தம்பிஇ ஞவுற ஒண்பொருள் யாவுமோர்
தண்டு டொன்றிடவே
தங்கிடு மாமணி யென்றுகொள் தீமைத
ழைந்தோன் நண்பினர்தாம்
நம்பிடு மா றிவள் முன்புபோய் வாய்மைந
வின்றே கும்பொழுதோர்
நங்குரை கூறிட ஒன்றர வால்அவன்
நைந்தே பொன்றல் பொயோ
கம்பிசை காதனை நிந்தைசெய் வேள்விக
லந்தா யென்றுனையே
கன்றல்செய் வீரன் இருந்திலனோ?அரி
கண்டால் உண்டிடுமே

வம்பிசை யேன்அவ லங்கொடு சோர்வுறல்
வந்தா டம்புலியே
மங்கள மாதையில் ஒன்றபி ராமிமுன்
வந்தா டம்புலியே. 27

### கழங்காடற்பருவம்

முத்தமிழும் முச்சுடரும் முக்குணமும் முத்தொழிலும்
மூவுலகும் முக்காலமும்
முத்தேவும் முத்தேய மும்பகரும் ஏடணைகள்
மூன்றுமென மூவுருவமாய்ப்
பத்தர்பலர் செப்பிடநின் அத்தமிசை வைத்தாடல்
பயிலும்அம் மானைபோலப்,
பவளமொ டிரத்தினம் தரளம் வயி ரம்பச்சை
பகர்நீல முதல வாகும்
உத்தமச் சீர்மருவு கற்கொடு சமைத்திட
உறும்கழற் காய்க ளேந்தி
ஒண்கனக மன்றினிடை கொண்கனெதிர் நடமாடும்
உண்கணுறு பெண்க ளரசே
புத்தகக் கலைவாணி நத்தருட் கவுமாரி!
பொற்கழங் காடியருளே
பூம்பொழில்கொள் மாதைமுத் தாம்பிகையெம் அன்னைநீ
பொற்கழங் காடியருளே. 28

### நீராடற்பருவம்

சோலை மணக்கும் மருங்கி லெலாம்
தூய்மை மணக்கும் உணவிலெலாம்
சொல்லில் மணக்கும் கல்வியெலாம்
தோற்ற மணக்கும் செம்மைஎலாம்

ஆலை மணக்கும் வயல்களெலாம்
அருட்சீர் மணக்கும் கோயிலெலாம்
அன்பு மணக்கும் முகத்திலெலாம்
ஆவல் மணக்கும் மொழிகளெலாம்
ஓலை மணக்கும் பாடலெலாம்
உரைக்க மணக்கும் உள்ளமெலாம்
ஒழுக்க மணக்கும் மக்களெலாம்
உண்மை மணக்கும் உரைகளெலாம்
மாலை மணக்கும் புயத்தழகி
வாசப் புதுநீ ராடுகவே
மாதைப் பதிப்பம் பாநதியின்
வாசப் புதுநீ ராடுகவே. 29

ஊசற்பருவம்

செம்பவள நற்கால் நிறுத்திவயி ரத்தாற்
நிகழ்ந்தமேல் விட்டம் இட்டுச்
செறிநாவ லம்பொனுற் சங்கிலி யமைத்(து)அதில்
சீர்கொள்நித் திலவிதானம்
உம்பரிடை தூக்கிநவ ரத்தினப் பொற்பலகை
உறவமைத் தம்பு யப்பூ
உறையுமிரு மாதரும் வடந்தொட் டசைத்தாட்ட
ஊர்வசி முதற்சொல் மடவார்
தம்பதத் தவிர்சிலம் போலிட நடஞ்செயச்
சாரும்நா ரதர்தும்புரு
சத்தசுர வீணையிசை செய்திடச், செயஇயம்
சார்அலைக்கடலில் ஆர்ப்ப
அம்பகத்(து) அங்கியுறும் நம்பனுட் பொங்கழகி
அணியூசல் ஆடியருளே
அமரர்பணி மாதைவளர் குமரிமுத் தம்மைநீ
அணியூசல் ஆடியருளே. 30

# திருவாமாத்தூர்த் திரிபந்தாதி

## இரட்டணை-பண்டிதை

அசலாம்பிகையம்மாள் அவர்களால் பாடி, உரையும் எழுதப்பட்டு
ஸ்ரீ தண்டபாணி சுவாமிகளாலும்
திருவாவடுதுறைத் தம்பிரான் திருவாமாத்தூர்
ஸ்ரீ சுப்பிரமணியத் தம்பிரான் அவர்களாலும்
திருவொற்றியூர் சுந்தர சுவாமிகள் சென்னை பண்டிதை
மனோன்மணி யம்மாள் இவர்களாலும்
சிறப்புக் கவியருளப் பெற்று 1897 ல்
அச்சிட்ட புத்தகத்துள்ளது.

கட்டளைக்கலித்துறை (பாங்கி கூற்று)

அன்னங் குருகு மணிப்பூவை யோடுள் அறிவினையும்
தன்னங் குருகுடை நாணுந் துறந்துநின் தார்பெற எம்
பொன்னங் குருகு நிலைக்கேது செய்வம்? புகன்றிடுவீர்
மன்னங் குருகுல மாதேவ! மாதை வரோதயனே. 31

1. அன்னம் குருகு மணிப்பூவை – அன்னப் பறவை, புரு நாகணவாய்.

2. தன் அம் குருகு உடை நாணும் துறந்து - தனது அழகியவளைகள், உடை நாணம் இவற்றை யிழந்து.

3. எம் பொன் அங்கு உருகும் நிலைக்கு - எமது பொன் ஒத்ததலைவி வருந்தும் துயர்க்கு.

4. மன் நம் குலகுரு மாதேவ - நிலைத்த எம் குலக்குரு வான பெருமானே!

---

# மாதையின் மாண்பு

திரு. சுந்தரசுவாமி அவர்கள், தலைவர்
கௌமாரமடாலயம், சிரவணபுரம் - கோவை.

வெண்பா

1. முத்தாம் பிகைத்தாய் முயங்கு திருக்கோயில்
நத்தார் குழையழக நாத னெதிர்—வைத்தாடல்
நண்ணுதிரு மாதையெனும் நற்பதியின் மாண்பறிவார்
விண்ணுறையும் தேவர் வியந்து.

2. தம்பியைவஞ் சித்துப்பொய் சாற்றுந் தமயனுளம்
வெம்பி அழஅரவாய் வீட்டியே—நம்புமுண்மை
காட்டிடுமுத் தாம்பிகைமேற் காந்திசைநோக்கும்தளிச்சீர்
நாட்டியது மாதை நகர்.

3. பம்பைநதிக் கீழ்க்கரையின் பாற்கோயி லென்றறியார்
தெம்புடன்மேற் பாலென்னச் செப்பினர்—வம்பகலப்
பாடும் இரட்டையர்தம் பாமொழிபோல் மேற்கரையில்
நீடியது மாதைநகர் நின்று.

4. பொன்கேட்பா யென்றுசிவன் போந்தான்; எனக்கோயில்
முன்போதும் பூத மொழிவழிபோய்—இன்பாடற்
சுந்தரனர் ஈரடுக்குச் சொற்பதிகம் பெற்றதெழிற்
பைந்தமிழ்ச்சீர் மாதைப்பதி.

5. கண்முதலாம் அங்கம், கவினுமரன் சார்பிலதேல்
பண்பினதன் றென்று பகர்ந்ததே—சண்பைவந்து
வெம்பந்தம் நீக்கருட்சீர் மேவுதிரு மாதையினிற்
சம்பந்தர் போற்றும் தமிழ்.

6. தேமாம் பழம்போலத் தித்திக்கும் ராமர்பணி
சீமான்பே ரென்றார் திருப்பவனி—மாமேன்மை
நாவுக் கரசர் நவின்றிட்டார் மாதைஅரன்
மேவும் அருளை வியந்து.

---

1. முத்தாம்பிகை சந்நிதி மேற்குப் பார்த்திருப்பதைக் குறிக்கும்.
2. விருத்தசிலையென்ற திருவட்டப்பாறை வரலாறு.
3. இரட்டையர் பாடலுக்காகப் பம்பைநதி திரும்பிய செய்தி.
4. சுந்தரமூர்த்திநாயனருக்காகப் பெருமான் செய்த ஆடல் (கானடனன் கானடனன் என்ற பதிகம்.)
5. காணாத கண்ணெல்லாம் காணாத கண்களே என்ற வரிசையில் ஞானசம்பந்தர் பாடிய பதிகம்.

7. வண்ணக் கவிபாடி மாதைச் சிவன்வருசீர்
பண்ணமைய அப்பர் பகர்ந்தபடி—எண்ண
முடியாஎண் சந்தம் முழக்குதண்ட பாணி
அடிகளுறல் மாதையல்ல வா?

8. மூவா யிரத்துக்கும் முன்னுமே லாந்தொகைசேர்
பாவா னதைக்கொள் பதிஎங்கள்—தேவான
வண்ணத் திருப்புகழ்க்கோன் மன்னுதிருக்
தண்ணளிசேர் மாதைத் தலம். [கோயில்கொளல்

9. சிரவையிரா மானந்த தேவன் குருவாய்ப்
பரவ வருதண்ட பாணிப்—பரமனுரு
தங்கிடத்திற் கோயில் சமைத்துப் பணியும்இடம்
எங்குளது மாதைஅல்லா தே?

10. ஆண்டபிரான் சீரார் அழகியநா தன்கருணை
நீண்டஅபி ராமனென நீடுமுப்பேர்—பூண்டஎழிற்
கண்ணுதலோ ராமனிரு கால்போற்றும் சீரினது
பண்ணவர்சொல் மாதைப் பதி.

11. முப்பேர் கொளும்மாதை முக்கணனை நெல்லைவந்து
முப்பேர்கொள் வண்ண முனிஅருளால்—நற்பேறு
மன்னுகவு மார மடம்சபைதோய் சீரினது
துன்னுபுகழ் மாதைஎனச் சொல்.

---

6. ஆமாத்தூர் அரனே என்றழைத்தலும் தேமாத்தீங்கனி போலத் தித்திக்குமே-என்று, அப்பர் திருக்குறுந்தொகையிலும், தலைவி கூற்றாகத் தாண்டகமும் கூறியதைக் குறிக்கும்.

7. வண்ணங்கள் தாம்பாடி என்ற தாண்டகம், (தண்டபாணி சுவாமிகள் வண்ணம் பாடிய சிறப்பு, கோயில் மடம் உள்ள குறிப்பு).

8. தண்டபாணி சுவாமிகள் பாடிய பதிகச்சதகம். சதகப்பதிகம், தலபுராணம் முதலியன.

9. இராமானந்த சுவாமிகள், தண்டபாணி சுவாமிகளுக்கு ஆலயம் உண்டாக்கி வணங்கிய வரலாறு.

10. ஆமாத்தூர்ப் பெருமான் நாமம் ஆண்டநாயகர், அபிராமேசர், அழகியநாதர் என மூன்று.

11. தண்டபாணி சுவாமிகள், திருப்புகழ்ச் சுவாமிகள் முருகதாச சுவாமிகள் என்று பெருமானைப்போல அடிகளாரும் முப்பெயர் பெற்றமை.

## க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழ்

எம்பால் வந்தீர் இரட்டையர் நீர்
எம்மைப் பாடுவீர் என்றே
எம்மான் அருளத் திருமுன்னே
இருந்து கலம்ப கம்பாடச்
செம்பா கஞ்சேர் கலம்பகத்திற்
சிறந்த பம்பை மேற்கரையில்
திகழாலயங்கொண் டார்என்று
செப்பப் புலவர் அதேதென்ன
நம்பா! நாங்கள் உரைத்தபடி
நதியைக் கீழ்பால் திருப்பென்ன
நாதன் அருளால் வடக்குவிட்டு
நண்ணும் கீழ்ப்பால் பெருகிவரும்
பம்பா நதி சூழ் ஆமாத்தூர்ப்
பாலா சிற்றிற் சிதையேலே
பச்சைமயில்வா கன உன்னைப்
பணிவோம் சிற்றிற் சிதையேலே.

திருப்புகழ் ஜோதி,

திருமுருக. கிருபானந்தவாரியார் சுவாமி அவர்கள்

இயற்றியது

வரைமங்கை மணந்தருளும் வரையேந்துந் தேவன்
வரையனைத்தும் வணங்கும்வெள்ளி வரைவாழுந் தேவன்
திரைமங்கை தனைச்சடையிற் சேர்த்தருளுந் தேவன்
சித்தாந்த முத்திமுதல் சிவானந்த தேவன்
உரைமங்கை உறை நாவின் மகிழ்பிரம தேவன்
உலகுண்டோன் காணாத உயர்தேவ தேவன்
தரைமங்கை மகிழ் ஆமாத் தூர் வாழுந் தேவன்
தனை யடைந்தார் வினையடையார் சார்புடையார் தாமே

வேதாந்த சித்தாந்த மீதிலகுந் தேவன்
மெய்த்தவருக் கருள்மேரு மெய்த்தவர்கொள் தேவன்
நாதாந்த முணர்ந்தநவ நாதர் தொழுந் தேவன்
நாவரசும் பூவரசும் நண்ணுபெருந் தேவன்
கீதாந்த ஆரூரர் கேண்மைமிகு தேவன்
கேளாத கேள்வி யெலாங் கேட்பிக்குந் தேவன்
தாதார்ந்த பொழில்புடை சூழ் ஆமாத்தூர்த் தேவன்
சரணடைந்தார் அரணடைந்தார் தாழ் வடையார் தாமே.

காமாந்த காரமறக் காட்சிதரு தேவன்
கலைமதியை முடித்தருளுங் கலைகடந்த தேவன்
மாமாந்தர் மனத்துறையு மறைபுகழ்மா தேவன்
மதயானைக் கருள்வானைக் கணையெனக்கொள் தேவன்
ஏமார்ந்த இருடியருக் கின்பருளுந் தேவன்
இறையேனும் மறவாதார்க் கிறையாகித் தேவர்,
தாமாந்த அமுதளித்த ஆமாத்தூர்த் தேவன்
தனைக்கண்டார் நரகவே தனைகாணார் தாமே.

## வாழ்த்து

செந்தமிழ்ச்சீர் வாழ்க! திருவாமாத் தூர்வாழ்க!
அந்திப் பிறைகொள் அபிராமன் – சொந்தமைந்தர்
வாழ்க!முத் தாம்பிகைத்தாய் மாணருட்சீர் வாழ்கவே.
சூழ்கஅவர் தொண்டர் சுகத்து.

திருவருள் துணை

# திருவாமாத்தூர்த் தல நூல்கள்

| | | பாடல் எண் |
|---|---|---|
| திருஞானசம்பந்தர் | தேவாரப் பதிகங்கள் 2 | 22 |
| திருநாவுக்கரசர் | திருக்குறுந்தொகைப் பதிகம் 1 | 11 |
| ,, | திருத்தாண்டகம் | 10 |
| சுந்தரமூர்த்திசுவாமிகள் | தேவாரப்பதிகம் 1 | 11 |
| இரட்டைப் புலவர்கள் | கலம்பகம் | 101 |
| அருணகிரிநாதர் | திருப்புகழ் | 4 |
| தண்டபாணி சுவாமிகள் | தலபுராணம் | 1008 |
| ,, | சதகப்புதிகம் | 1000 |
| ,, | பதிகச்சதகம் | 1000 |
| ,, | யமக அந்தாதி | 104 |
| ,, | திரி ‍ந்தாதி | 103 |
| ,, | சிலேடைவெண்பா | 102 |
| ,, | சிவன்பதிகம் 3 | 36 |
| ,, | அம்மன் பதிகம் 2 | 24 |
| ,, | நவரத்தினத் திருப்புகழ் | 9 |
| ,, | ஊர்ப்பதிகம் 1 | 12 |
| ,, | திரு விழாப்பாடல் | 39 |
| ,, | கிறிசெய் பதிகம் | 12 |
| ,, | விநாயகர் பஞ்சரத்தனம் | 7 |
| ,, | ,, வெண்பா | 1 |
| ,, | வாரத்திருப்புகழ் | 7 |
| ,, | அம்மன் வெண்பா | 1 |
| ,, | நவரத்தினத் திருப்புகழ் | 11 |
| சுந்தரத்தம்மாள் | இரட்டையாசிரிய மாலை | 26 |
| ,, | அபிராம மாலை | 29 |
| ,, | அந்தாதி | 101 |
| ,, | முத்தாம்பிகை மாலை | 51 |
| ,, | முத்தாம்பிகை பதிகம் | 11 |
| ,, | அபிராமேஸ்வரர் பதிகம் | 11 |
| செந்தினையக அடிகளார் | அழகியநாதர் சதகம் | 101 |
| ,, | வண்ணமஞ்சரி | 30 |
| ,, | செவ்வேள்மாலை | 100 |
| முருகதாச ஐயா | முத்தாம்பிகை பிள்ளைத்தமிழ் | 102 |
| அசலாம்பிகையம்மாள் | திரிபந்தாதி | 101 |